*Kumaraṉ*

*Āram 10, muttu 37*

*May 04, 1933*

Record no. 313

REG. NO. M. 1823. 12-பக்கங்கள் KUMARAN WEEKLY.

வாரப் பதிப்பு.
சந்தா விவரம்.
உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 7-0-0

# குமரன்

மாதப் பதிப்பு.
சந்தா விவரம்.
உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 0-12-0
வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 1-4-0
ஆடிமீ வருஷ ஆரம்பம்.

வியாழன்தோறும் வெளிவரும்.

PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 10. காரைக்குடி, ஸ்ரீ முக-ஸூ சித்திரை-மீ உஉ-உ (4—5—33.) முத்து 37.

மத்திய ஆசியாவில் எட்டு வருடம் கால்நடையாய்ச் சென்று அரும்பெரும் பொருட்களைக் கண்டு பிடித்தறிந்திருக்கும் இருவர் சமீபத்தில் பம்பாய்க்கு வந்து சேர்ந்தார்கள். இவ்விருவர் பெயரும் டாக்டர் பிரிகர் போலின், டாக்டர் எரிக் நோரின் என்பவைகளாம். டாக்டர் போலின் மங்கோலியாவில் கோகோனுர், கான்ஷு என்ற ஏரிகளின் வடமேற்குப் பக்கத்தில் ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தார்.

டாக்டர் நோரின் மங்கோலியாவழியாக நடந்து சிக்கியாங்கிற்குச் சென்று அங்கிருந்து லாடாக், ஸ்ரீநகர்வழியாக திபெத் ராஜ்யத்திற்கு வந்தார். அவர் மத்திய ஆசியாவில் அலைந்து திரிந்த ஆறு வருடத்திலும் ஒரு வெள்ளைக்காரனையாவது பார்க்க வில்லையாம். அவர் பம்பாய் வந்த பிறகு தான் ஒரு சினிமாக் கொட்டகையைப்பார்த்ததாகச்சொன்னார். அவருடைய ஆறுவருட வாழ்க்கை முழுதும் மலைகளிலும் காடுகளிலும் மணலாரணியங்களிலுமே கழிந்தது. அது பற்றி ஒருபத்திரிகைப்பிரதிநிதி கேட்டபோது 'ஆ! எவ்வளவு இனிய வாழ்க்கை நடாத்தினேன்! இன்னுமொரு முறை அம்மலைகளுக்கிடையே வசிக்கச் சென்று விடலாமாவென்று யோசிக்கிறேன்' என்றார்.

அவருடைய நீண்ட பிரயாணம் 1925ல் குய்ஹுஹாவிலிருந்து ஆரம்பமாகியது. அவரும் அவருடைய துணைவர்களும் உறும்சிஎன்றவிடத்திற்குவந்ததும் பலபகுதிகளாகப்பிரிந்தனர். அதில் அவர் மட்டிலும் டாரிம் பிரதேசத்திற்கு சென்று புதிதாயமைந்திருக்கும் டாரிம் நதியையும் லாப்னுர் ஏரியையும் பார்வையிட்டார். லாப்னுர் என்ற ஏரி பிரயாணம் செய்யுமோர் நீர் நிலையாகும். அவ்வேரிப் பிரதேசத்தில் அவர் ஆறுமாதம் தங்கியபின் வடசிக்கியாங்கிலிருக்கும் தியான்ஷான் மலைக்குப் போனார். அங்கு அவர் இரண்டுவருடமாக நீல்ஸ், அம்போல்ட், புரோபசர் ஆகியவர்களோடு ஆராய்ச்சி செய்தார். அவ்வாராய்ச்சி மிஸ்டர் டி. எல். யுவானின் தலைமையில் நடைபெற்றபோதுதான் மலையோரங்களில் ஒரு ஏரியின் கரையைக் கண்டார்கள். அக்கரையால் டாரிம் பிரதேசம் ஒரு காலத்தில் ஓர்பெரிய ஏரியாயிருந்ததென்றும் நாளடைவில் தண்ணீர் வற்றிப்போயிற்றென்றும் யூகித்துக் கொண்டார்கள். கோரிய, லாப்னுர் ஆகியவற்றினிடையில் மறைந்துபோன இந்தடாரிம்ஏரியின்கரை இன்றும் காணப்படுகின்றது.

## மத்திய ஆசிய ஆராய்ச்சி.

**4 கோடி வருடங்கட்கு முந்திய பிராணிகள்—12 அங்குல இறக்கையுள்ள ஈ—80 அடி நீளமுள்ள பல்லி—இயங்கும் ஏரி அழிந்துபட்ட தடாகம்—மறைந்துபோன நெருப்புக்கோழி.**

### இயங்கும் ஏரி.

டாக்டர் நோரின் அந்தக்காலத்தில் இயங்கும் ஏரியைப்பார்வையிட்டார். அந்தத்தருணத்தில் அவரோடு சென்றிருந்த சிலர் அப் பிரதேசங்களைச் சுற்றிப் பார்த்து லூலன் என்ற அழிந்து பட்ட நகரத்தின் கோபுரத்தைக் கண்டார்களாம். அந்த நகரத்தை ஏற்கனவே 30 வருடங்கட்கு முன்பு டாக்டர் ஸ்வென்ஹீடியா என்பவர் கண்டிருந்தார். ஆகவே அவருடைய ஞாபகார்த்தமாக ஒரு ஸ்வீடிஷ் கொடி அங்கு நாட்டப்பட்டது.

1932ல் டாக்டர் நோரினும் அவருடைய துணைவர்களும் அவர்களுடைய ஆராய்ச்சிகளைக் வென்லன் மலைக்கு மாற்றினார்கள். அம்மலை டிபத்தின் வட எல்லையாயிருந்து வருகின்றது. அதன் வடபாரிசத்தில் ஒரு வருடம் தங்கி விட்டு அப்பால் தென்பக்கத்திற்கு வந்தனர். அங்கு குளிரும் வரட்சியும் மிகுந்திருந்ததால் அவர்களுடைய ஆராய்ச்சி யொழுங்காய் நடைபெறவில்லை. ஆகவே சில நாட்களுக்குப் பின்பு இருவரும் இருந்த வசதிகளையெல்லாம் இரண்டாய் பங்கிட்டுக் கொண்டு இரண்டு தனியிடங்களை ஆராய்ச்சி செய்யமுயன்றார்கள். அப்போது டாக்டருக்குக் கிடைத்த மிருகங்கள் 48. அவற்றில் பல மூன்று மாதங்கட்குள் இறந்து போக ஒரு கழுதையும் ஒரு குதிரையும் எஞ்சியிருந்தன. அவற்றை யோட்டிக்கொண்டு டாக்டர் நோரின் சீன சுரங்க வேலைக்காரர்கள் தங்கிய ஓரிடத்திற்கு வந்தார்.

### நம்பிக்கை யற்ற நிலைமை

குதிரைகளும் கழுதைகளும் இறந்து போய்விட்ட காரணத்தால் கையிலிருந்த சாமான்களை யெல்லாம் டாக்டர் நோரும், லியூ என்ற ஒரு தாவர சாஸ்திரியும் ஆறு வேலைக்காரர்களுமே சுமந்தார்கள். அவர்களால் சுமக்க முடியாத சாமான்களை யெல்லாம் வழியில் போட்டு விட்டார்கள், இவ்வாறு தள்ளப்பட்ட சாமான்களில் கூடாரங்கட்கு வேண்டிய பொருட்களும் போயின. எனவே அவர்கள் திறந்த வெளியிலேயே தூங்கினர். வேலைக்காரர்கட்கு மிகுந்த சிரமேற்பட்டது. இவ்வாறு சில நாட்கள் ஆனதும், அவர்கள் வேறு கொஞ்சம் மிருகங்களை வாங்கிப் போதிய சௌகரியங்களெல்லாமமைத்துக் கொண்டு மீண்டும் ஆராய்ச்சி செய்யத் தொடங்கினார்கள்.

இவ்வாராய்ச்சியால் பல அரும் பெரும் விஷயங்களைக் கண்டுகொண்ட டாக்டர் நோரின் 19000 அடிக்கு மேல் உயரமுள்ள இடத்தில் தான் ஆராய்ச்சி முழுதும் நடத்தினாராம். எட்டுமாதங்களாக 17 ஆயிரம் அடிகட்குக் கீழ் வரவேயில்லையாம்,

### கண்டுபிடித்தவை

டாக்டர் நோரின் வந்து சில தினங்களானதும் டாக்டர் போலின் வந்தார். அவர் லக்ஷக்கணக்கான வருடங்கட்கு முன்னிருந்த ராக்ஷச ஈக்களையும், 80 அடி பல்லியின் எலும்புக்கூட்டையும், பல மரங்களின் பாகங்களையும் கண்டார். அன்றி மத்திய ஆசியாவில் பல உடைந்துபோன (நெருப்புக்கோழியின்) ஆஸ்ட்ரிச் சின் முட்டைகளையும் கண்டுபிடித்தார். இதிலிருந்து ஒருகாலத்தில் நெருப்புக் கோழிகள் மத்திய ஆசியாவில் வசித்துவந்தன வென்றும் பிற்பால் மறைந்துபோயின வென்றும் யூகிக்க விடமிருக்கின்றது. அதோடு பீக்கிங் மனிதனின் உற்பத்தியை அறிந்து பூமிசாஸ்திரப் படம் தாவர சாஸ்திர உண்மைகள் ஆகியவற்றையும் அடைந்தார். அவர் கொணர்ந்த பொருட்கள் 70 பெட்டிகளிருந்தன. ஆதலால் 35 ஒட்டகைகள் அமர்த்தப்படவேண்டியிருந்தன.

டாக்டர் போலின் 1929ல் கியூகுவா வென்றவிடத்திலிருந்து புறப்பட்டு பல துணைவர்களோடு சென்றார். இவரோடு சென்ற ஒட்டகைகள் 85. இவர் கோகோனார் தடாகத் தண்டை சென்று மங்கோலியாவிலுள்ள எட்சிங்கால் பிரதேசத்தைப் பார்த்தார். அங்கு 10 கோடி வருடங்கட்கு முந்திய பல மீன்கள், செடி கொடிகள், பூச்சிகளாகியவற்றின் பகுதிகள் கிடைத்தன. பின்பு அங்கிருந்து தென்திசை நோக்கிவந்து வடமேற்கு கான்ஸுவை அடைந்தார். அங்கும் 3 கோடி முதல் 4 கோடி வரை வருடப்பழக்கமுள்ள செடி கொடிகளும் எலும்புகளும் கிடைத்தன. அவர் பெட்டிகளிலடைக்கப்பட்ட மீன்களைப்போல பாறைகளில் அழுந்தப் பதிந்திருந்த பல மீன்களைக் கண்டார் அவர் கொண்டு வந்த ராக்ஷஸ ஈக்களில் ஒன்றின் ஒரு இறகு ஆறங்குல நீளமிருந்தது. காராஹூர் என்றவிடத்தில் ஆராய்ச்சி செய்தபோது உத்தேசமாக 2000 வருடங்கட்கு முன்பிருந்த மக்கள் உபயோகித்து வந்த ஆயுதங்கள் மட் பாண்டங்கள் ஆகியவற்றை எடுத்தார்.

இங்ஙனம் பல பொருட்களை எடுத்து விட்டு அவர் கோகோனுரை அடுத்திருக்கும் மலைகளைக் கடாலானர். அம்மலைகள் ஒன்றின் பின்னொன்றாய் அடுக்கடுக்காயிருக்கின்றன. அவற்றில் பிரயாணம் செய்து கொண்டே அவர் பூமிசாஸ்திர சம்பந்தமான உண்மைகளைக் கண்டுபிடிக்க முயன்றார். அப்போது அவருக்கு மத்திய ஆசியா பூமியதிர்ச்சிக்கு பலதடவை ஆளாயிருந்திருக்க வேண்டுமென்றும், ஆதலால் ஆதிகால மனிதர் பயந்து போயிருக்கவேண்டு மென்றும் தோற்றியது. அதோடு வளர்ந்து கோட்டை போன்றிருக்கும் மலைகளே நெருப்புக் கோழி முதலியவற்றை வெளியே போகாதபடி அடைத்துக் கொன்றிருக்க வேண்டுமென்றும் யூகித்தார்.

### 16000 அடி கணவாய்.

அவர் சிலவிடங்களில் 16000 அடி உயரமுள்ள கணவாய்கள் வழியாகப் போவதாய் உணர்ந்தார். அப்படிப்பட்ட கணவாய்கள் பல கடந்து செல்லப்பட்டன. அவ்வாறு கடந்துசெல்லப்பட்டது அவருக்கு பிரயோஜனத்தை யளியாமலில்லை. 4 கோடி வருடங்கட்கு முன்பிருந்த பல அற்புதச் செடிகளைக் கண்டார். அதன்பின் அவர் செப்டம் பிரதேசத்தை ஆராய்ச்சி செய்தார்.

இத்தகைய நீண்ட ஆராய்ச்சியின் பின் பல ஒட்டகைகளிலும் குதிரைகளிலும் நிரப்பப்பட்ட எண்ணிறந்த அதிசயப் பொருட்களோடு வந்திருக்கிறார். அவரிடம் இன்றும் நன்றாக நரம்புகள் புலப்படத் தகுந்தவண்ணமிருக்கும் 12 அங்குல இறக்கைகளுடைய ராக்ஷச ஈ முதல் எண்பதடி வரையிலும் நீளமுள்ள அழிந்துபட்ட ராக்ஷச பல்லிகளின் எலும்புக்கூடுகள் வரையிலும் இருக்கின்றன. அப்பொருட்களை பல மேனாட்டு ஆராய்ச்சியாளர் கண்டு அதிசயிக்கின்றனர்.

## பொறுக்கு மணிகள்.

லண்டனிலுள்ள ஒரு சாக்லேட் கைத்தொழிற் சாலையில் வேலைபார்த்து வந்த ஸ்ரீ. எ. மூயூசி என்பவர் தற்போது உலகிலேயே பேர்பெற்ற சங்கீத நிபுணராக விளங்குகிறார்.

0 0 0

1932ம் வருடத்தில் இந்தியாவில் சட்டமறுப்பு சம்பந்தமாக 500 பேருக்குக் கசையடி கொடுக்கப்பட்டிருப்பதாகப் பார்லிமெண்டு கூட்டத்தில் மிஸ்டர் பட்லர் கூறினார்.

0 0 0

2400 வருஷங்களுக்கு முந்திய விதைகளைக் கொண்டு நார்போக் கிராமமொன்றில் புதிய பட்டாணிச் செடிகளைப் பயிரிடுகின்றனர். எகிப்திய சமாதி ஒன்றிலிருந்து அவ்விதைகள் கிடைத்தன.

0 0 0

ஜெர்மனியில் கீல் என்ற இடத்தில் புதிதாகக் கட்டிக் கொண்டிருக்கும் ஒரு யுத்தக் கப்பலுக்கு எத்தகைய ஆணியையும் வைக்காமல் மின்சார சக்தியைக் கொண்டே கட்டியிருக்கிறார்களாம்.

0 0 0

பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டு மந்திரி ஸ்ரீ. தாமஸ் பொதுக் கூட்டங்களில் பேசுவதற்கு முன், தமக்கு முன் போட்டிருக்கும் மேஜை துணி மீது தாம் பேசப் போகும் விஷயங்களைப்பற்றிக் குறிப் பெடுத்துக் கொள்ளுவது வழக்கம்.

0 0 0

எகிப்திலிருந்து லண்டன் மிருகக் காட்சிக்கு ஒரு பெரிய நத்தைகொண்டு வந்தனர். அது சுமார் 4 வருடங்களாக ஒரு மேஜையைப் பற்றிக் கொண்டு அப்படியே இருந்தது. இவ்வளவு காலத்திற்குப் பின் அது இப்பொழுது தான் விழித்து இரைதேடச் செல்லுகிறது.

0 0 0

மழையில் குடையில்லாதவர்கள் படும் கஷ்டங்களை நிவர்த்திப்பதற்காக லண்டன் நாடகசாலையொன்றில் புதிய ஏற்பாடொன்றைச் செய்திருக்கிறார்கள். ரூ. 3 அட்வான்சும், 6அணா வாடகையும் கொடுப்பவர்களுக்கு அங்கேயே குடைகளைக் கொடுக்கின்றனர். வீடு திரும்பியதும் குடைகளை அனுப்பிவிட்டு அட்வான்ஸ் தொகையைத் திரும்பவும் பெற்றுக்கொண்டு விடலாம்.

0 0 0

கோஸ்டாரிகாவில் சான்ஜோஸ் என்றவிடத்தில் இரு தம்பதிகள் விவாகஞ் செய்துகொண்ட 28 வருஷத்திற்குள் 25 குழந்தைகளைப் பெற்றிருக்கின்றனர். புருஷனுக்கு இப்பொழுது வயது 47, மனைவிக்கோ 45. 25வது குழந்தை சமீபத்தில் தான் பிறந்திருக்கிறது. குழந்தைகளெல்லாம் இப்பொழுது திடகாத்திரத்தோடு சௌக்கியமாகவே இருக்கின்றன.

0 0 0

புதிய ஜனக் கணிதப்படி கிழக்கிந்தியத் தீவுகளில் ஜனத்தொகை 6 கோடி, இதில் 58500000 பேர் முஸ்லீம்கள். மீதியான 1500000 சீனக்காரர். கிறிஸ்தவர்-புத்தரும் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். மேலும் இத்தீவுகளில் கச்சேரிகளில் வேலை செய்யும் சிப்பந்திகள் ஹாலண்டு உத்தியோகஸ்தர்கள் ஆகியவர்களின் எண்ணிக்கை 93 ஆயிரம். இராணுவத்திலும் வியாபாரத்திலும் ஈடுபட்டிருப்பவர்களையும் சேர்த்துக் கணக்கிடுங்கால் அவர்கள் தொகை இரண்டு லக்ஷத்துக்கு எட்டக் கூடியதாகும்.

## அடியோடு போச்சு.

(முகிலன்)

### அடடா!

எவ்வளவு பெரிய மாற்றம்! இந்து மதமுண்டான நாள்தொட்டு இது காறுமில்லாத ஒரு பெரும் மாற்றம் ஏற்படப் போகிறதே! என்னென்பேன் காலமாறுபாட்டை! ஜகத்குரு காவீரபீடம் ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகள் அவர்கள் அமெரிக்காவுக்குப்போகப்போகிறாராம். ஏன்?

### சிகாகோவில்

ஓர் பெரிய சர்வமத மகாநாடு கூடப்போகின்றது. அதன் முக்கிய கூட்டங்கள் ஆகஸ்டு 27ந்தேதி முதல் செப்டம்பர் 17ந்தேதி வரையிலும் நடைபெறும். அதில் பலதேசப் புலிகளாகிய மதாசாரியர், கடவுளைக் கண்டோர், அவருக்குப் பக்கத்தில் நின்றோர், அவரோடு சமாசாரம் பேசினோர், தாடிவளர்த்தோர், மீசையணிந்தோர், உடலை மறந்தோர், உணவை வெறுத்தோர், உடையைத் துறந்தோர், சடையைத் தரித்தோர், காட்டிலுறைந்தோராகிய பலதிறப்பட்ட மத ஞானமுடையவர்களெல்லாம் வரக்கூடும். ஒவ்வொருவரும் அவரவர்கள் கண்ட உண்மைகளை வாரி வாரி இறைப்பார்கள். அதில் நமது கரவீர பீட ஸ்ரீ சங்கராசாரியாரும் தாம் கண்ட பெரிய உண்மைகளையெல்லாம அள்ளி அள்ளி குவிப்பார். அதில் இந்தியாவில், அவர் உண்மைநாடி ஆலயப்பிரவேசத்தை எதிர்த்தது, குருவாயூருக்குத் தூதுவிட்டது, அரசாங்கத்தாரிடம் சட்டமூலம் வாதாடியது ஆகியவைகளைக் கூறுவாரோ என்னமோ? நல்லவேளையாக அவர் இந்திய சமூதாய ஒழுங்கை அங்கு பிரசாரம் செய்துவிடாமலிருந்தால் நல்லது. ஒருகால் பிரசாரம் செய்து விட்டாரானல்—ஐயோ—என்னவாகுமோ?........இந்தியாவுக்கு நற்சாட்சிப் பத்திரம் வழங்கிய மிஸ் மேயோ அமெரிக்காவில் தான் இருக்கின்றாரென்பது நமது சங்கராசாரியாருக்கு ஞாபகமிருக்கட்டும்!

### இத்தகைய ஒரு

மகாநாட்டில்தான் சுவாமி விவேகாநந்தர் ஒரு காலத்தில் உலகம் நடுங்குமாறு தத்துவ கர்ஜனை செய்தார். இந்தியாவின் நற்பெயரை ஒவ்வொரு மகனுடையவும் கண்ணுகருள் கிருஷ்ண மணியில் பிரகாசிக்குமாறு காண்பித்தவர் அவரே. அந்தப்பெரிய தியாகியின் — கர்ம வீரரின் — தேசாபிமான செழுஞ்சுடரின் வழிபற்றிக் காவீர பீடஜகத்குருவும்செல்கின்றார். இவர்செலவுவிவேகாநந்தரின் செல்கையோடு எந்தெந்தப் பகுதிகளில் ஒத்திருக்குமோ விடிந்தால் தான் வெளிச்சம். நிற்க. ஒரு சந்தேகம்.

### இந்துமதப் பிரசாரக்

கொழுந்தாகிய இவர் கப்பலேறலாமா? கப்பலேறுத லென்பது இந்துமத தத்துவத்திற்கு புறம்பானதல்லவா? மதத்தின தலைவராயொளிர்பவரே மதக்கோட்பாட்டை உடைக்க முயன்றால், அவர் செய்கையை எந்த மனிதன்தான் ஏற்றுக்கொள்வான்? ஐயயோ! கப்பலேறாமல் அமெரிக்கா செல்லவும் வழியில்லையே....ஆம் ஆகாயவிமானத்தில் சென்றால் பாவமில்லை போலிருக்கிறதே. நமது சங்கராசாரியார் பணத்திலும் குறைந்தவரல்ல; ஆகவே அவர் ஒருகால் ஆகாயக்கப்பலில் செல்லக்கூடுமோ? அப்படிச் செல்வதானாலும் அது பழைய முறைக்கு, முன்னோர் வழக்கத்துக்கு ஏற்றதன்று அல்லவா? மாமூல், பண்டை முறைகட்கு இரும்புத்தூணாய் இந்தியாவில் வாழ்கின்றவரல்லவா சங்கராசாரிகள்? அப்படிப்பட்ட அவரே பண்டைய முறையொன்றை உடைப்பதென்றால் ஒழுங்குண்டா? மேலும் அவர் நீசர்க (மிலேச்சர்)ளாகிய ஐரோப்பியராலும் அமெரிக்கர்களாலும் உபயோகிக்கப்படுகின்ற கப்பல், விமானமாகியவற்றில் பிரயாணம் செய்வதும் அவர்களோடு உறவாடி திட்டாவதும் கிஞ்சிற்றேனும் மேற்றதல்ல அன்றி நன்கு யோசிக்கின்ற தனிமிலேச்சர்களே நிறைந்து பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களே இல்லாத—வேதநாதம், சுருதியோசை ஆகமவாடைகளே இல்லாத—கங்கை யமுனை சிந்து நதிகளின் சேர்க்கையே இல்லாத ஒரு நாட்டிற்கு செல்வதே முதலாவது பிசகாம். அப்பால் அந்நாட்டாரோடு சரிசமானமாக நடந்து, உண்டு தங்கி, பேசி அவர்களுக் கிடையில் வாழ்வதென்றால் ஆயிரம் ஆதிதிராவிடர்களை நிமிஷத்தில் தொட்டது போலவோ அன்றி எல்லா பறையர்களையும் கோவிலுக்குள் புக சம்மதித்த தற்கொப்பாகவோ ஆகுமே. அதோடு மகாநாட்டில் ஆங்கிலத்தில் பேசினாற்றானே ஜனங்கட்கு விளங்கும்? ஒரு மத போதகராகிய, கடவுளின் அருளொளி அதிகமாயிலங்குகின்ற ஒருவர் மிலேச்சபாஷையில் பேசலாமா?

### இத்தகைய பாபங்களை

எவ்வாறு தீர்த்துத் தன்னைப் புனிதமாக்கிக் கொள்வார் ஆசாரியார்? சரி, மாளவியா அவர்களைப்போல கொஞ்சம் களிமண்ணும், கங்காஜலமும் உடன் கொண்டு சென்றாரானல் எல்லாம் சரியாகி விடும். தீட்டு ஏற்பட ஏற்பட கங்காஜலத்தைத் தளித்துத் சுத்தம் செய்துவிடலாம். அத்தகைய சோபனத்திற்கு களிமண் தேவையானல் அதனையும் உபயோகித்துக் கொள்ளலாம். இந்தவிடத்தில் ஒரு விஷயம். சங்கராசாரியார் தம்மை சுத்தம் செய்துகொள்ள எடுத்துக் கொள்கிற பிரயாசையை அமெரிக்கர் கண்டு கொள்ளலாகாது. ஒருகால் மேயோ பார்த்து விட்டால் இன்னொருபுத்தகத்தை எழுதி விடுவாள்.

### இனி ஆசாரியார்

பிரசங்க மெப்படியிருக்கும்? அமெரிக்கா முழுவதையும் இந்துமதத்திற் கிழுத்து விடுவாரோ என்னமோ? ஒருகால் இழுத்து விட்டால் அங்கும் பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திர ஜாதிகளை ஏற்படுத்தி தீண்டாமையைக் குடி வைத்து, மனுநீதி, இராமாயணம், பாரதம், உபநிடதங்கள், வேதங்கள் போன்றவைகளை ஆணியடித்து வைத்து விடலாகாது? பாவம் அமெரிக்கர் இவற்றின் நல்லுறவைப்பெறு திருக்கு வருகின்றார்கள். ஆசாரியார் கெடுத்து விடலாகாது.

### மற்றொரு விஷயம்

அமெரிக்கர் வரும் விருந்தினர்கட்கு டீபார்ட்டி முதலியன நடத்தமியல்பினர். அந்த வழக்கத்தை ஆசாரியார்களிடத்தில் காட்டிவிடலாகாது. காட்டுவதானல் நிச்சயமாகவும் ஒரு உயிரை அழித்தவர்கட் கொப்பாவார்கள். அதோடு இந்தியப் போராட்டத்தைப்பற்றியோ தீண்டாமை யொழிப்புப்பிரசினையைப்பற்றியோ மகாத்மா பட்டினி, குருவாயூர்ப் போராட்டமாகியவற்றைப் பற்றியோ கேள்வி கேட்டுவிடலாகாது. மௌனமாக விருந்து ஆசாரியார் கூறியவற்றைக் கேட்டுக்கொண்டேயிருக்கவேண்டும். நிற்க ஆசாரியார் திருநீறும் உருத்திராக்கமும் தம்முடன் ஏற்றிச் செல்கிறார்? அதோடு அங்கு அவர்,

## விகடத் துணுக்குகள்.

ஆசிரியர்:—"நாங்கள் வீட்டிலிருக்கிறார்கள்" இந்தவாக்கியம்சரிதானா?

ஒரு மாணவன்:—இல்லை சார்.

ஆசிரியர்:—ஏன்?

மாணவன்:—நாங்கள் பள்ளிக்கூடத்திலிருக்கிறார்கள். வீட்டிலில்லை; ஆகவே தப்புசார்.

0 0 0

வழுக்கத்தலையுள்ள ஒரு தந்தை:— பாலைவன மென்றா லென்ன?

புதல்வன்:—ஒன்றும் முளையாத விடம்.

தந்தை:—அதற்கு ஒரு உதாரணம் சொல்.

புதல்வன்:—உன் தலையப்பா?

0 0 0

சுப்பன்: உலகில் அதிகமாகப்பேசுபவர்கள் யார்?

வேணு:—பெண்கள் தான் அதிகமாகப் பேசுவார்கள்.

சுப்பன்:—எப்பொழுது குறைவாகப்பேசுவார்கள்?

வேணு:—பெப்ரவரி மாதத்தில்.

சுப்பன்:—ஏன் அந்த மாதத்தில் மட்டிலும் குறைவாகப் பேசுகிறார்கள்?

வேணு:—அந்த மாதத்தில் தேதி 28க்தானே.

0 0 0

கந்தன்:—நான் பரீட்சையில் தோற்றுப் போய் விட்டால் என் தலையையே உடைத்துக்கொள்ளுவேன்.

ராமன்:—நான் பையைக் கிழித்துக்கொள்ளுவேன்.

கந்தன்:—உன்பையிலொன்று மில்லையே.

ராமன்:—உன் தலையிலும் ஒன்று மில்லையே.

0 0 0

நல்லொழுக்கம் பற்றிப்பேசிய குரு "நாம் பிறருக்கு மங்களகரமான ஒன்றை செய்தால் நமக்கு அது இரட்டிப்பாகக் கிடைக்கும்" என்றார்.

ஒருவர்:—ஆம் உண்மை. நான் என் புதல்வியை யொருவருக்கு மணம் செய்து கொடுத்தேன். இப்போது அவளும் அவரும் என் வீட்டிலேயே குடியிருக்கத் தொடங்கி விட்டார்கள்.

0 0 0

மனைவி.—காபி விஷமாம்; அது உடம்புக்கு ஆகவே ஆகாதாம்.

புருஷன்:— அப்படியானல் குடியாதே. இருக்கிற காபியையெல்லாம் என்னிடத்தில் கொடு. நான் குடித்து உன் தொல்லையை ஒழித்துக் கொள்கிறேன்.

0 0 0

ஒரு முதலாளி தன் வேலைக்காரனிடம் "அடே! யாராவது என்னைத்தேடிவந்தால் நான் உள்ளே இல்லையென்று கூறிவிடு" என்றார். அப்பால் அரைமணி நேரத்திறகுப்பின் மணியொன்று அடித்தது. வேலைக்காரன் அசையவேயில்லை. பின் கோபத்தோடு முதலாளிவந்து:—அடே மணி அடித்தது காதில் விழவில்லையோ?

வேலைக்காரன்:—தாங்கள் வீட்டிலில்லை என்று நினைத்துவிட்டேன்.

### உலாவுவதற்காக

மனிதனை மாடாக்கி இயங்கும் வாகனத்தைக் கொண்டு போய் விடலாகாது. அமெரிக்க மனிதர் சுமக்கும் பல்லக்கைக் கண்டால் நகைவயிற்றைக் கிழித்துக் கொள்ளும்.





## சினிமா பகுதி.

### சினிமாப்படத்தின் தந்தை

இரண்டு மாதங்களுக்கு முன்னர் நமது குமரனில் "மின்சாரதந்தை" என்ற தலைப்பில் மின்சாரம் கண்டு பிடித்தவர் எடிசன் என்று கூறினோம். இயக்க விளக்கப்படக் கருவியும் இவர் கண்டு பிடித்ததாகக் கூறப்பட்டது. இது அமெரிக்கர்கள் அபிப்பிராயம். ஆனல் எடிசன்கண்டு பிடிப்பதற்குப் பல வருடங்களுக்கு முன்பே (Kouis Aime Angustione Le Prince) லி பிரின்ஸ் என்ற பிரெஞ்சுக்காரர் இயக்க விளக்கப்படக் கருவியைக் கண்டு பிடித்திருக்கிறார் என்று பிரெஞ்சுகாரர் கூறுகின்றனர்.

லி பிரின்ஸ் ஓர் பெரிய மனிதர். ஆறு அடி நான்கு அங்குல உயரமும் அதற்கேற்ற உருவமும் உடையவர். 1888-ம் ஆண்டு லீடா என்னுமிடத்தில் ஓரே கண்ணுடி அமைத்த கருவியால் படம் பிடித்தார், ஒரு (Projector) ப்ரொஜக்டரும் செய்தார். இக்கருவை சரிவர சீர்திருத்தி வியாபார வழிக்குச் செல்ல இயலவில்லை. இறுதியில் ஓர் நூதன வழியில் இறங்கினர். 1890 ஆண்டு செப்டம்பர் மாதம் 16ந்தேதியன்று டிஜான் (Dijon) என்னும் நகரத்தில் பாரிஸ் புகை வண்டியில் சென்றாராம். அதன் பிறகு அவரைக் காணோம். ஆனல் அவர் கருவி செய்யும் நூதனமுறையை கைக்கொள்ள ஏற்பாடு செய்திருந்த ஒரு கொள்ளைக் கூட்டத்தார் அவரை எங்கோ ஒளித்து வைத்திருக்கிறார்களென்று நம்பப்படுகிறது. இன்னும் உண்மை தெரியவில்லையாம்.

### சென்னையில் எச். எம். ரெட்டி.

சாவித்ரி, பிரஹலாதா என்ற பேசும்படக் காட்சிகளைத் தயார்செய்தன டயரக்டர் திரு. எச் எம். ரெட்டி பம்பாயிலிருந்து சென்னை வந்திருக்கிறார். இவர் தன்னுடைய புதிய படத்திற்காக வேண்டிய ஏற்பாடுகள் செய்து வருகிறாராம்.

### டக்லஸ் பேர் பாங்ஸ்.

இவ்வுலக வெள்ளித்திரைகளில் நம் மனதை மிகவும் கவர்ந்தவர்கள் சார்லி சாப்ளின் ஹாரால்ட், டக்ளஸ், டால் மட்ஜ் என்பவர்களல்லவா? இவர்களைப்போல் எவ்வளவோ அந்நிய தேச நடிகர்களிருப்பினும் தற்காலத்திற்கேற்ற கோலத்துடனும், தீரவீரத்துடனும் நடிப்பவர்கள் முற்கூறப்பட்டவர்களே. அவர்களில டக்ளஸ்பேர் பாங்ஸ் என்பவரைப் பற்றி சிறிது கூறுவோம்.

குளோரடோ என்னுமிடத்தில் 1888ம் வருடம் மேமீ 23உ பிறந்தவர். ஐந்தடி பத்தங்குல உயரமும், செந்நிறமான கவிந்த கண்களும் சிறிது சுருண்ட முடியும் உடையவர் இளம் வயதில் சுரங்கவேலைபடித்தார். ஆனல் இதில் இவருக்கு அதிக நஷ்டமில்லை. குஸ்திச்சண்டை, கத்திச்சண்டை முதலியவைகள் பழகவேண்டுமென்று இவருக்கு ஓர் பேராசை இருந்தது. இதை நிறைவேற்ற அடிக்கடி டென்வேண்டலு என்னுமிடத்திற்குப் போவார். அங்கேயே அரங்கமேடைகளில் நடிக்கப் பிரியப்பட்டார். இவருடைய உணர்ச்சியைக் கண்டு இவரது நண்பர்கள் ஷேக்ஸ்பியர் கதைகளில் நடிக்க ஏற்பாடு செய்தனர். இதில் இவருக்குக் கொஞ்சம் புகழ்உண்டாயிற்று. பின்னர் ஹார்வர்டு என்னும் கம்பெனியில் ஒருவருடம் பயிற்சி கற்றுக்கொண்டு நியூயார்க் என்னுமிடத்தில் பிராட்வே மேடைகளில் நடித்தார்.

நியூயார்க்கில் இவர் படக்காட்சி சாலைகளில் தவறாது இருப்பார். இவருடைய எண்ணம் அதிலேயே நின்றது. ஆதலால் "ஹோலிவுட் சென்று படக்காட்சிக்கம்பெனியில் சேர்ந்தார். அங்கே முதல் முதலாக மூன்றுபோர் வீரர்கள்" (Three Musketeers) என்ற அலெக்ஸாண்டர் போப் எழுதிய நாவலில் நடித்து நல்ல பிரக்யாதி பெற்றார். இதுவே முதல் ஜெயம். பின்னர் எண்ணிறந்த படங்களில் கதாநாயகனாக நடித்திருக்கிறார். இவர் எப்பொழுதும் தன்னுயிரைப் பற்றி கவலைப்படாது எவ்வித ஆபத்தான இடங்களிலும் நடிப்பார். இவர் நல்லவர்களுக்கு சாதுவாகவும் துஷ்டர்களுக்கு துஷ்டனாகவும் இருப்பார். எவ்வளவு பெரிய ஆபத்தாயினும் ஓர் புன்சிரிப்பு சிரித்தாரானல் உடன் ஜெயம் தான் ஏற்படும்.

இவருடைய மனைவி மிஸ். பெத் சல்வி என்பவள். இவர்களுக்குப் பிறந்தவரே "ஜூனியர் டக்ளஸ் பேர்பாங்க்ஸ்" என்பவர். நமது டக்ளஸ் பேர் பாங்க்ஸ் முதல் மனைவிக்குப் பிறகு மேரி பிக்போர்டை மணந்தார்.

## ஹாலிவுட்.

பம்பாய், கல்கத்தா, சென்னை முதலிய விடங்களில் இயக்கச் சித்திரக்காக்ஷிஉற்பத்தி செய்வோர் எப்போதும் மேல் நாட்டாரின் வழிகளைப் பின்பற்றியே படங்கள் தயார்செய்கின்றனர்; செய்துமிருக்கின்றனர். ஆனல் ஏன் அவர்களைப் போல் ஏராளமான மூலதனத்துடனும் விஸ்தாரமான இடங்களை வைத்துக்கொண்டும் செய்யக்கூடாது?

மேல் நாட்டில் ஹோலிவுட் என்பது இயக்க விளக்கப்படக் கம்பெனிகள் இருக்குமிடம். அதன் அமைப்பு மிகவும் விசித்திரமாம்.

அங்கே ஒரு ஸ்டுடியோவிலிருந்து மற்றொரு ஸ்டுடியாவுக்கு செல்ல வேண்டுமானல் அரைமணி நேரத்திற்குக் குறையாமல் மோட்டார் சவாரி செய்யவேண்டும். மொத்தமாக ஒவ்வொரு ஸ்டுடியோவுக்கும் நூற்றுக்கணக்கான சதுர அடி விஸ்தாரமுள்ள பூமியிருக்கிறது. அதில் பெரிய கம்பெனிகளின பெயர் பின் வருமாறு:—

1. பாரமவுன்ட்
2. மீட்ரோ கோல்ட்வின் மேயர்
3. யுனைட்டெட் ஆர்டிஸ்ட்ஸ்
6. யுனிவர்ஸல்
5. வார்னர் பிரதர்ஸ்,
6. பாக்ஸ்

இவைகளில் மூவிடோன் சிடி, மீட்ரோ, வார்னர் பிரதர்ஸ் என்பவைகள் தங்கள் கம்பெனிக்குள்ளேயே பெரிய நகரங்களை ஏற்படுத்தியிருக்கின்றனவாம்.

மூவிடோன் சிடி 104 ஏக்கர் விஸ்திரணமுள்ளது. இதில் 11 (நமக்குபயோகமுள்ள) ஸ்டேஜுகளும், மற்ற சவுகரியங்களும் உண்டு. இவ்வுலகத்திலுள்ள முக்கிய நகரங்களைப் போல தனித்தனியாக நகரங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவை சுமார் 65 ஏக்கர் தனியாகவும் சாசுவதமாகவும் இருக்கிறது.

இன்னும், உடைகள் உடுத்துவதற்கும், பேசும் யந்திரங்கள் அமைக்கப்பட்டதும், போஜனசாலைகளும், க்ஷவரசாலைகளும் ஏராளமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்தக்கம்பெனிக்குச் சொந்தமான ஒரு ஆஸ்பத்திரியும் இருக்கிறது.

மீட்ரோ கோல்ட்வின் மேயர் கம்பெனியும் இதே போன்றுதான். மற்றக்கம்பெனிகளும் அப்படியே இருக்கின்றன. ஆனல் மீட்ரோ கம்பெனியார் தமக்காகச் சொந்தமாகப் போலீஸ்கள் ஏற்படுத்தியிருக்கின்றனர். கம்பெனிக்குள் சாதாரணமாக எவரும் உட்செல்லமுடியாது. பரிசீலனை செய்தபின்பே அனுப்புவார்கள்.

இனி வார்னர் பிரதர்ஸ்லைக் கவனிப்போம். இதற்கு 515,100 சதுர அடியுள்ள 44 சொந்தக் கட்டிடங்கள் இருக்கின்றன. எல்லாம் ஸ்பெயின் தேசத்து கட்டிடங்கள் மாதிரியாக அமைக்கப்பட்டிருக்கின்றன. இவைகள் கான்கிரீட் கட்டிடங்களே. இதற்கு 12 சவுண்ட் புரூப் ஸ்டேஜுகளும் சுமார் 10,00000 சதுர அடி விஸ்தீரணத்தில் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இதற்குள் 4 மைல்கள் நீளம்வரை தளம் போட்ட ரஸ்தாக்கள் இருக்கின்றனவாம். ஒரு ரஸ்தாவில் சென்றால் மறுபடியும் தான் முதல் முதல் புறப்பட்ட ரஸ்தாவை அடையாளம் கண்டுபிடிப்பது துர்லபமாகும்.

இதில் ஓர் பெரிய ஸ்டுடியோ பெயின்டிங், கேமிரா, மெஷின், தச்சு, அச்சு, முலாம், வெட்டுவேலைகள், ரிப்பேர், காய்ச்சும் வேலை, முதலிய ஒவ்வோர் வேலைகட்கும் தனித்தனி ஷாப்பும், ஏராளமான கட்டிடங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இன்னும் இதற்கு எத்தனை சவுகரியங்கள் வேண்டுமோ அவ்வளவும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

மொத்தமாக ஹாலிவுட்டில் இவ்வுலகத்திலுள்ள எல்லா மதஸ்தர்களும் இருக்கின்றனர். எந்தக் காரியத்தையும், உதாரணமாக கடற்சண்டை, கப்பல் கவிழ்தல், விமான வித்தைகள், நெருப்பு வேலைகள் முதலியன எல்லாம்-திடீரென எப்படி நடக்குமோ அதுபோல் பதின்மடங்கு உன்னதமாக செய்துமுடிப்பர். வேலைக்காரர்களெல்லோரும் வேலையில் ஒழுங்காகவும், எஜமானர் மேல் விஸ்வாஸமாகவும், கீழ்ப்படிதலாகவும், நடப்பர். இந்த இயக்கவிளக்கப்படக்காக்ஷி கம்பெனிகாரர்களுள் ஒற்றுமை உண்டு. ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்வர்.

இத்தனை விசேடங்களும் ஒற்றுமையும் அமைந்திருப்பதனலன்றோ "ஹாலிவுட்" மிகப் புகழ் பெற்றோங்குகிறது. இந்த ஐக்கிய உணர்ச்சி நம நாட்டிலேற்படும் காளெந்நாள்?

# செய்கோனும் சீர்கேடும்

## நகரத்தார் படும்பாடு.

செய்கோனில் நம் செட்டியார்கள் கொடுத்த கடனை வசூல் செய்ய நீதிமன்றத்தில் தீர்மானம்பெற்று அத் தீர்மானங்களை நிறைவேற்றி சொத்துக்களை ஏலத்திற்குக் கொண்டுவந்ததற்கு இவ்வூர் சர்க்கார் இவரை நாடு கடத்தின விஷயம் பத்திரிகைகளில் அன்பர்கள் பார்த்திருக்கலாம்.

இப்பிரஞ்சுக் குடியரசில் நீதிமன்றத்தில் ஒரு நீதியாகவும் கவர்னரின் விசேஷ அதிகாரத்தின்படி ஒரு நீதியாகவுமிருப்பது செட்டியார்களின் கஷ்ட காலமென்றே தெரிகிறது.

செட்டியார்கள் இத்தேசத்திற்கு வந்தது முதல் 1930ம் ஆண்டுவரை மிகவும் அமைதியுடனே தொழில் நடத்திவந்துள்ளார்கள். ஆனால் 1930ம் ஆண்டிலிருந்து "பக்ளீவ், சொக்த்திரூன்" என்ற இரு ஊர்களிலுள்ள செட்டியார்களின் கடை ஏஜண்டுகள்செய்த அநியாயங்கள் கூறத்தரமன்று. இவர்கள் இனங்களிடம் வரவேண்டிய பாக்கிகளுக்கு மேல்நடத்தி முதல் பதிவு (முதல் பதிவு என்பது சொத்தை எவர் முதலில் அட்டாச் செய்கிறாரோ அன்னவரின் பாக்கி பூராவும் கிடைக்கும். மீதமிருந்தால் பின் மறு தினங்களில் அட்டாச் செய்தவர்களுக்கு கிடைக்கும். எல்லோரும் ஒரே தினத்தில் அட்டாச் செய்தால் ஈவுப்பிரகாரம் கிடைக்கும்.) இந்த முதல் பதிவு போடுவதற்கு நீ முன் நான் முன் என்று கார் பிடித்துக்கொண்டு "கந்தோ" என்ற ஊருக்கு ஓடினார்கள். "சொக்த்திரூன், பக்ளீவ்" என்ற ஊர் இரண்டுக்கும் சொத்தை அட்டாச் செய்யவேண்டிய தலைமை ஆபீஸ் "கந்தோ" ஆகும். கெட்டபயத்தில் பணம் தரக்கூடிய இனங்களையும் மேல்நடத்தி இவர்கள் பதிவு போட்டதனால் தற்போது ஒரு காசும் தராது சொத்தை ஏலம்போட்டு வசூல்செய்து கொள்ளும்படி கூறுகிறார்கள்.

சொத்துக்களை ஏலம் போட நீதிமன்றத்தில் ஆர்டர் கொடுக்கிறார்கள். கவர்னரோ தன் விசேஷ அதிகாரத்தின்படி ஏலம் போடுபவர்களை நாடுகடத்தி வருகிறார். அன்னவர் நாடுகடத்துவதற்கு சில காரணங்களுக்கு நன்மையாகவே தெரிகிறது. எனென்றால் நான்கு ஆண்டிற்கு முன் 40,000ம் வெள்ளிமதிப்புள்ள சொத்து இன்று 4000ம் வெள்ளிக்குக்கூட வாங்குவாரில்லை. லட்சம் வெள்ளி சொத்துள்ள ஒருவருக்கு 5000 வெள்ளி கடனிருந்தால் அன்னவரின் கதி அதோகதி தான். ஏன்? அவரிடம் பாக்கியுள்ள பல செட்டியார்களில் சிலருக்குள் ஏதேனும் மனஸ்தாப மேற்படுமேல் உடனே ஒருவர் மற்றபாக்கிக்காரர்களுக்குத் தெரியாமல் மேல்நடத்தி பதிவுபோட்டு விடுகிறார். இவர் பதிவுபோடு முன்னால் வங்கிக்கு முதல்பதிவு இருக்கும். இவர் பதிவு இரண்டாவதாகும். இவர் மேல் நடத்தியதை அறிந்து மற்றபாக்கிக்காரர்களும் மேல் நடத்தி பதிவுபோட்டார்கள். கடைசியில் பதிவுபோட்ட அன்பர் எல்லாரும் நம்மை ஏமாற்றிவிட்டு முதல்பதிவு போட்டு விட்டார்களே என்று பொறாமை கொண்டு உடனே சொத்தை ஏலத்திற்கு கொண்டுவந்து விடுகிறார். ஏலத்தில் முதல் பதிவுள்ள வங்கிக்காரர் தன் பாக்கி வெள்ளி 2[illegible],000ம் வரைகேட்டு சொத்தை எடுத்துக்கொள்ளுகிறார். 2வது பதிவு போட்டிருக்கும் செட்டியாரோ தாம் முதல் பதிவின் பாக்கி வெள்ளி 20000மும் வட்டியும் ஏல செலவும் கட்டி சொத்தை ஏலத்தில் எடுக்க முடியாதென்று வாளாவிருந்து விடுகிறார். இவ்விதம் ஒருவருக்கொருவர் மனஸ்தாபத்தினால் இனங்களை மேல்நடத்தி சொத்தை ஏலம் போடுவதால் யாருக்குப் பணம் நஷ்டம் உண்டாகிறதென்பதை பெரியோர்களே கொஞ்சம் கவனித்துப்பாருங்கள். உலகமிருக்கும் நிலைமையை உத்தேசித்து முதல் பதிவுள்ள வங்கிக்காரர்கள் மேல் நடத்தாது சும்மா இருக்க, பின்பதிவுள்ள செட்டியார்கள் தங்களுக்குள்ளிருக்கும் மனஸ்தாபத்தினால் சொத்துகளை ஏலத்திற்கு கொண்டுவந்து தாமும முதல் பதிவுகளுக்குப் பணங்கட்டி சொத்தை ஏலத்தில் எடுக்காது வங்கிக்காரர்களை எடுத்துக் கொள்ளும்படி விடுவதானது யானை தானே தன் தலையில் மண்ணைவாரிப் போட்டுக் கொண்ட கதையை ஒத்திருக்கிறது.

பசாக்த்திரூன் பக்ளீவ் என்ற இரு ஊர்களிலும் கடைகள் வைத்திருக்கும் முதலாளிகளும் தங்கள் ஏஜண்டுகள் போட்டியின்மேல் இனங்களைக் கெடுப்பதை அறியாது நமது நன்மைக்கே மேல்நடத்தி பங்குபோட்டு சொத்துகளை ஏலம்போடுகிறார்களென்றெண்ணி பேசாதிருக்கிறார்கள். ஒரு கடையிலும் மேல் நடத்தாத (புரோநோட்டுகள்) சீட்டுகள் இருப்பது அரிது. தனக்கும் வராது தன் இனத்தாருக்கும் வாராது வங்கிக்காரராகிய அன்னிய வெள்ளையருக்குக் கிடைக்கும்படி சொத்துகளை ஏலம் போடாதிருந்தாலென்ன? சென்ற சிலதினத்திற்குமுன் இவ்வூர் இங்கிலீஷார் சிலர் நம் செட்டியார்களைக் கூப்பிட்டு 'இனிமேல் இனங்களை மேல் நடத்தி சொத்துக்களை ஏலம் போடாதீர்கள், 50000ம் வெள்ளி மதிப்புள்ள சொத்து இன்று 5000ம் வெள்ளிக்கு ஏலத்தில் வாங்குபவரில்லை. ஏலம் போடுவதால் உங்களுக்குத் தான் நஷ்டமுண்டாகிறது. தற்போது ஓதி அலொங்தோம் கம்பெனியால் கடன் கொடுக்க ஏற்பாடு செய்துவிட்டார்கள். ஏலம் போடுவதை நீங்கள் கொஞ்ச காலம் நிறுத்திவையுங்கள்' என்று சொல்லி அனுப்பினர். அதன்படி இவ்வூர் நகரத்தார்களும் எல்லா நாட்டுப் புறங்களுக்கும் ஏலம் போடக் கூடாதென்று கடிதம் எழுதி அனுப்பினார்கள். பக்ளீவ் சொக்த்திரூனிலிருக்கும் இரு செட்டியார்கள் நகரத்தார் கடிதத்தையும் அவர்கள் டெலிபோனில் கூப்பிட்டு ஏலத்தை நிறுத்தும்படி சொன்னதையும் மீறி ஏலம் போட்டு விட்டார்கள். ஏலம் போட்டு 10 தினங்களாகிறது. இன்று வரை கடிதத்திற்கு கட்டுப்படாது ஏலம் போட்டார்கள். இவ்வூர் நகரத்தார்கள் கூப்பிட்டு ஒன்றும் கேட்கவில்லை. இவர்கள் ஏலம் போட்டதால் இன்னும் பலரும் ஏலம் போட ஏற்பாடு செய்கிறார்கள். இதை நகரத்தார்கள் கவனிக்கவேண்டுவது மிகவும் அவசியம். கவனிக்காவிட்டால் நம்மை ஓர் சமூகத்தார் என்றழைத்து ஏலம் போடாது கொஞ்ச நாள் பாறுத்திருங்களென்று கூறிய கவுன்சிலருக்கு என்ன மதிப்பு இருக்கிறது? சர்க்கார் நாடுகடத்தும் போது கவுன்சிலின் தயவை நாடுவதும் அவர்கள் ஏலம் போடக் கூடாதென்று சொல்லியதற்கு சரி என்று சொல்லி மீறி ஏலம் போடுவதும் எந்த நீதியில் சேர்ந்ததோ!

தற்போது ஓதி அலொங் தோம் இனங்களுக்குக் கொடுக்கும் பணத்தை வாங்கிக் கொண்டு பின் இனங்களில் மெதுவாக வசூல் செய்வது தான் நலம்.

இவ்வூரில் உள்ள செட்டியார்கள் கடைகளில் சில செட்டியார்கள் வியாபாரத்தின் நிமித்தம் கடன்வாங்கினார்கள். தற்போது இனங்களில் முன்போல் வசூலாகவில்லை, மேல் நடத்தினால் நாடுகடத்துகிறார்கள். நாடு கடத்துமுன் வசூலானது போல் நாடு கடத்தப்பட்ட பின் வசூலாகவில்லை. செட்டியார்கள் மேல் நடத்தினால் சர்க்காரில் நாடு கடத்தி விடுவார்களானதினால் இனங்களும் தைரியமாக தரவேமாட்டோம், தெரிந்ததை பார்த்துக் கொள்ளுங்களென்று கூற முற்பட்டு விட்டனர் தாம் கொடுத்த கடனுக்கு அசலும் வாராது வட்டியும் வாராது தவிக்கும் இது சமயம் தாம் வாங்கிய கடனை எவ்விதம் அசலும் வட்டியுமாக உடனே தரமுடியுமென்பதை அறிவுள்ள நேயர்களே கொஞ்சம் ஆராய்ந்து பாருங்கள். கடன் கொடுத்திருக்கும் கனவான்களே, கஷ்டப்படுத்தி வசூல் செய்து பணங்களை வங்கியில் போட்டு வைப்பதைப் பார்க்கிலும் கருணை கூர்ந்து கஷ்டப்படுத்தாது சிலவருடகாலம் வரை பொறுமையுடனிருந்து எவ்விதம் பணம் கொடுத்தீர்களோ அவ்விதமே பணத்தை வாங்கிக் கொண்டால் தான் நலம். அன்றி மேல் நடத்தி இன்சால் வெண்டாக்கி உடனே வசூல் செய்ய நினைப்பீர்களானால் அது மிகவும் கெடுதலாக முடியுமென்பது திண்ணம்.

இவ்வூரில் முன் சிலர் இனங்களை வேட்டையாடி இவ்விதக் கஷ்டத்திற்கு கொண்டு வந்தார்கள். இக் கஷ்டம் போதாதென்று இவ்வூரில் சிலர் தனவணிகரின் குடும்பங்களையே சீர்குலைக்க முற்பட்டிருக்கின்றனர். இவ்விருவர்களும் தாங்கள் தாய்நாட்டில் எந்தவித நிலைமையிலிருந்தாலும் தற்போது பெரிய குபேரர்களுடைய கடைகளுக்கு வந்திருக்கிறோமென எண்ணி அக்கடைகளை தங்களுக்கு உரியதாகி விட்டதென்று நினைத்து அந்தக் கடைகளில் கடன் வாங்கி இருக்கும் செட்டியார்களைப் பற்றி பலவிதமாக இழிவாகப் பேசுவதுடன் பணம் தருகிறீர்களா, எங்களுக்குத் தெரிந்ததைப் பார்க்கட்டுமா வென்றும், பணம் தர முடியுமா இன்சால்வெண்டு கொடுக்க முடியுமா வென்றும் கேட்கிறார்கள். என்னே இவர்களின் ஒற்றுமை! தங்களிடம் கடன்வாங்கிய தனவணிகர்களைக் கெடுத்துவிட்டு தன்னரசுபுரிய விரும்பும் இவர்கள் கடன் கொடுத்த காலத்திலே கடைகளைக் கெடுக்க வேண்டுமென்னும் எண்ணத்துடனே தான் கொடுத்தார்கள்போலும். கடன் வாங்கியவர்களில் சிலர் இது சமயம் பணம் தரமுடியாது. இனங்களை ஒப்புக்கொள்ளுங்களென்று கூறுகிறார்களே; அவ்விதம் ஒப்புக்கொண்டாலென்ன; அது முடியாது, பணந்தான் வேண்டும், இல்லாதிருந்தால் மேல் நடத்துகிறோமென்று கூறுவதிலிருந்து இன்னவர்களின் எண்ணம் நன்கு விளங்குகிறதல்லவா? செட்டியார்களை மிரட்டும் இவர்கள் இதுசமயம் ஓர் இனத்தை மேல் நடத்திப்பணத்தை வசூல்செய்து விடுவார்களா? அநியாயமாய் செட்டியார்களை மேல் நடத்தி இன்சால்வெண்டாக்கி இவ்வூரில் செட்டியார்களுக்கு இருக்கும் இன்னும் கொஞ்சம் மதிப்பையும் கெடுத்துவிட இச்சில செட்டியார்களும் முன்வந்திருக்கின்றனர் என்பதை நினைந்து மிகவும் வருந்துகிறேன்.

நிற்க. இவ்வூரிலுள்ள செட்டியார்களுக்கு கடன் கொடுத்திருக்கும் பெரியோர்கள் இவ்வூரிலே மேல்நடத்தி வசூல் செய்யாது தாய்நாட்டில் மேல் நடத்தி அங்குள்ள சொத்துக்களையும் குடி இருக்கும் வீடுகளையும் ஏலம் போட்டு கெடுக்க நினைக்கிறார்கள். இதற்கு நமது இந்தியாவிலுள்ள காருண்யம் பொருந்திய நீதிபதிகள் அயல்நாட்டில் பட்ட கடனுக்கு தாய்நாட்டில் தீர்மானம் கொடுக்காது எந்தத் தேசத்தில் கடன் கொடுத்தார்களோ அந்தத் தேசத்திலே சென்று வசூல் செய்து கொள்ளும்படி தீர்ப்பளிக்க வேணுமாய் தாய்நாட்டிலுள்ள கனம் நீதிபதிகள் யாவரையும் மிகவும் தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

"சமூகத் தோண்டன்"





# மீண்டும் மகாத்மா உபவாசம்

## நிபந்தனையில்லாது 21 நாள் நீடித்திருக்கும்.

### விரத ஆரம்பம் மே எட்டாந்தேதி.

ஹரிஜன ஊழியம் சம்பந்தமாக மகாத்மா காந்தி 21 நாள் உபவாசமிருக்க நிச்சயித்துள்ளார். ஏப்ரல் 26ந்தேதி தான் திடீரென்று அந்நிச்சயம் ஏற்பட்டது. அவரோடு சிறையிலிருந்துவரும் சர்தார் படேல், மகாதேவ தேசாய் ஆகியவர்கட்குக்கூட 26ந்தேதிக்கு முன்பு விஷயம் தெரியாது. எனவே எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். தம் உபவாசத்தைப் பற்றி மகாத்மா விட்டிருக்கும் அறிக்கையாவது:—

#### மகாத்மாவின் அறிக்கை

எனக்குள்ளேயே சென்ற சில தினங்களாக ஒரு பெரிய குழப்பமிருந்து வந்தது. நான் அதை எதிர்த்துப் போராடி வந்தேன். ஹரிஜன தினம் நெருங்கியபோது அந்தக் குழப்பம் அதிகரித்தது. 'நீ ஏன் அதைச் செய்யக்கூடாது' என்று என் மனச்சாக்ஷி கேட்டது. நான் எவ்வளவோ எதிர்த்துப் போராடிப் பார்த்தேன். ஆனால் ஒன்றும் பலிக்கவில்லை. கடைசியில் நிபந்தனையின்றியும் மாற்றுவதற்கு ஹேதுவில்லாமலும் 21 நாள் உபவாசமேற்கொள்ள வேண்டுமென உறுதி ஏற்பட்டது. இந்த உபவாசம் மே மாதம் எட்டாந்தேதி பகல் ஆரம்பிக்கப்படும். மே மாதம் 29-ந் தேதி பகல் முடிவடையும். திடீரென உபவாசம் மேற்கொண்டதற்குக் காரணங்கள் பலவாக இருக்கலாம். நான் அவற்றை எடுத்துச்சொல்ல முடியாதபடி புனிதமானவையாகவுமிருக்கலாம். ஆனால் அவையாவும் ஹரிஜனங்களின் பெரிய லக்ஷியத்தைப் பொறுத்ததேயாகும். குறிப்பிட்ட ஒருவர் விஷயமாக இந்த உபவாசம் ஆரம்பிக்கப்படப் போவதில்லை. இது எல்லோரையும் பொறுத்தது. என்னைப்பொறுத்தே இப்போது நான் இந்த உபவாசத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறேன். இது நான் பரிசுத்தமடைய ஆத்ம வணக்கம் செய்வதற்காக ஏற்பட்டதாகும். அதிக சுறுசுறுப்பாகவும் ஜாக்கிரதையாகவுமிருக்கவும் இது ஒரு சாதனமாகும். ஆனால் எனது முயற்சியைப் பாராட்டுபவர்கள் எவரும் நான் செய்வது போல செய்யக்கூடாது. அவ்விதம் அவர்கள் உபவாசமிருப்பதானால் எனக்கு அதனால் தொந்தரவு ஏற்படும். அவர்களும் அதனால் விசேஷக் கஷ்டமடைய ஹேதுவாகும்.

பின்னால் இன்னும் என்னை விட யோக்கியதை உடையவர்களும் பரிசுத்த வாழ்க்கையுடையவர்களும் உபவாசங்கள் மேற்கொள்ள விருப்பதற்கு இது ஒரு முதற்படியாகும். சென்ற செப்டம்பர் மாதமுதல் ஹரிஜனங்கள் சம்பந்தமான தஸ்தாவேஜிகளையும் பல பிரபலஸ்தர்கள் எழுதிய நூல்களையும் ஆராய்ந்து பார்த்துவருகிறேன். அந்தத் துன்பம் நான் எதிர்பார்த்ததை விட அதிகமாகவிருக்கின்றதென்பது எனக்குத் தெரிந்தது. பணத்தால் அந்தத் துன்பத்தை போக்க முடியாது. ராஜீயசுதந்தரம், வெளிஸ்தாபனங்கள் முதலியவற்றாலும் அவர்களுக்கு நன்மை ஏற்படாது. ஆனால் இந்த மூன்றும் அவர்களுக்கு அத்யாவசியம் தான். ஆனால் அவர்கள் ஆத்ம சக்தியும் ஆத்மலாபமும் அடையப்பார்க்க வேண்டும். அதாவது ஆத்மப்பரிசுத்தம் அடைய வேண்டும். அதற்கு உபவாசமும் பிரார்த்தனையும் தான் ஏற்ற வழிகளாகும். பலத்தைக் காட்டி அகம்பாவம் கொள்வதால் உண்மை என்ற கடவுளை அணுக முடியாது. பலஹீனர்களிடமும் பணிவுள்ளவர்களிடமும் தான் ஆண்டவனைப் பார்க்க முடியும்.

மனத்தில் நல்லுணர்ச்சி யில்லாமல் உபவாசமிருந்து உடலை வாட்டிக்கொள்வதால்மட்டும் பயனில்லை. ஆத்ம உணர்ச்சியுடன் சத்தியத்தை வெளிப்படுத்தக்கூடிய உபவாசமாக அது இருக்கவேண்டும். ஆகவே சத்ப உணர்ச்சி உடையவர்களும் எதிரிகளிடத்தும் அன்பு கொள்ளக் கூடிய மனோபாவம் உடையவர்களும் உண்மைக் குழைப்பவர்களும் மிருக இச்சை யில்லாதவர்களும் உலக ஆசைவிட்டவர்களும் தான் உபவாசமிருக்கலாம். ஆகவே ஒருவரும் முன்னதாக ஒரு ஒழுங்குபடுத்திக் கொள்ளாமல் நான் குறிப்பிட்ட மாதிரி உபவாசத்தை ஆரம்பிக்கக்கூடாது.

நான் மேற்கொள்ளவிருக்கும் உபவாசத்தைப்பற்றி தப்பபிப்பிராயம் கொள்ளக்கூடாது. நான் இறந்துவிட வேண்டுமென விரும்பவில்லை. இந்த லக்ஷியத்துக்காக நான் உயிர்வைத்துக்கொண்டிருக்கவே விரும்புகிறேன். இதற்காக உயிர் விடவும் சித்தமாகத்தானிருக்கின்றேன். ஆனால் என்னிடத்திலும் எனது சகா ஊழியர்களிடத்தும் அதிக பரிசுத்தமும் தியாகமுமிருக்க வேண்டுமென நான் விரும்புகிறேன். மாசில்லாத பரிசுத்த மனதுடைய ஊழியர்கள் எனக்கு அதிகமாக வேண்டும். பரிசுத்தமான காரியங்கள் நடப்பதாக என் அறிவிப்புக்குக் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. அத்தகைய காரியங்களை நடத்துவோர் இந்த லக்ஷியத்தில் தலையிடாமல் உடனே விலகிவிட வேண்டுமென இந்த உபவாசமூலம் அவர்களை வேண்டிக்கொள்ளுகிறேன். சநாதனிகளாகவுள்ளவரில் என் நண்பர்கள் பலரும் மற்றும் சிலரும் நான் ராஜீயசூழ்ச்சியர்க இவ்விதக் காரியங்களை நடத்திவருவதாக நினைக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். இப்போது நான மேற்சொன்னவருக்கு உபவாசத்தின் மூலமாவது அவர்கள் இது ஒரு மதசம்பந்தமானகாரியமென்பதை அறிந்து கொள்ள வேண்டுமென நான் விரும்புகிறேன்.

என் மூலம் இன்னம் அதிக ஊழியம் நடக்க வேண்டுமென்பது ஆண்டவன் திருவுள்ளமாகவிருக்கும் பட்சத்தில் நான உணவுட்கொள்ளா விட்டாலும், எனக்கு யாதொரு கஷ்டத்தையும் ஏற்படுத்தமாட்டார். அவர் எனக்குப் பாரமார்த்திக உணவைக் கொடுத்து என் உயிரைக் காப்பாற்றிவருவார். அவர் இவ்வுலகத்திலுள்ளவர்களைக் கொண்டே காரியங்களை நடத்தி வருவதால் தீண்டாமையை ஒழிக்க வேண்டுமென்ற விருப்பம் கொண்டவர்கள் பலரும் ஜாதி ஹிந்துக்கள் பேரால் ஹரிஜனங்களுக்களிக்கப்பட்ட வாக்குறுதியைத் தங்களாலானவரை பூரணமாக நிறைவேற்ற முயற்சித்து அதன் மூலம் எனக்கு அவர்கள் உணவு கொடுக்க வேண்டும்.

நான் உபவாசமிருக்கப்போவதைப்பற்றி எனக்கு சகாக்கள் எவ்விதத்தாலும் பரபரப்பு அடையக்கூடாது. அதற்குப்பதிலாக அவர்கள் இதனால் அதிக பலம் பெற வேண்டும். அவர்கள் தாங்கள் வேலை செய்து வருமிடத்தை விட்டு வரக்கூடாது. இயக்க சம்பந்தமாக ஏதாவது விஷயங்களை அவசியமாக்க கலந்து பேசுவதற்கின்றி வேறெதற்காகவும் என்னிடம் ஒருவரும் வரக்கூடாது. இந்த 21நாள் உபவாசத்தை விட்டுவிடும்படியோ ஒத்திவைக்கும்படியோ என்னைக்கேட்கக் கூடாதென்றும் நான் நண்பர்களை பிரார்த்தித்துக்கொள்ளுகிறேன். நான் மேலே சொன்னதை போல இந்த உபவாசம் நானாக ஏற்றுக்கொண்டதாம். இந்தியாவிலும் உலகத்தின் மற்றபாகங்களிலும் உள்ள எனது நண்பர்கள் எனக்காக என்னுடன் சேர்ந்து நான் இந்த கஷ்டத்தினின்றும் சவுக்கியமாக மீட்சி பெற வேண்டுமென்றும் நான் இறந்தாலும் சரி, இருந்தாலும் சரி, உபவாசத்தை நான் எதற்காக மேற்கொண்டேனோ அந்த லக்ஷியம் இனிதுநிறைவேற வேண்டுமென்றும் பிரார்த்தனை செய்யும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

உபவாசத்தால் எனக்கு என்ன நேர்ந்தாலும், உண்மையை மறைக்கும் தங்கத்தாலாகிய மேல்மூடியை எடுத்துவிட வேண்டுமென்பதை மட்டும் கவனிக்கவேண்டுமென சநாதனிகளைக் கேட்டுக் கொள்ளுகிறேன்."

### விரதத்தை மாற்றுவதெப்போது?

மகாத்மாவின் விரத சம்பந்தமான செய்திகளைக்கேட்டு ராமதாஸ் காந்தி, தேவிதாஸ் காந்தி ஆகியோரும் ஸ்ரீமதி சரோஜனிதேவி முதலியாரும் சிறைக்குச் சென்றார்கள். மகாத்மா தம்முடிவிலிருந்து மாறமாட்டாரென்று சொல்லிவிட்டார். அவர் பிரதிநிதிகட்குக் கூறியதாவது:—

'என்னைப் பேய் பிடித்துக்கொண்டிருக்கிறதோ? அன்றி பெருமான் பிடித்துக் கொண்டிருக்கிறதோ? எதுவாயிருந்தாலும் சரி; அவைகளில் ஒன்று என்னிடம் வந்து 'நீ உபவாசமிருக்காதே' என்று சொன்னாலொழிய, உபவாசமிருக்க நான் செய்துகொண்டிருக்கும் ஒரு முடிவை மாற்ற முடியாது. அல்லது என்னைவிடத் தெளிவான திருஷ்டியுடைய ஒருவர் என்னிடம் வந்து என்னை பிடித்துக் கொண்டிருக்கும் பேய் கூறும் யோசனைப்படி நான் இவ்விதம் நடப்பதாகவும் என்னைப் பெருமான் பிடித்துக்கொண்டிருக்கவில்லையென்றும் எனக்கு நம்பிக்கை ஏற்படும்படி சொன்னால் நான் எனது முடிவை மாற்றிக்கொள்ளக்கூடும். இதற்கு முன் நான் எனது தவறைச் சீர்ப்படுத்திக் கொள்ள ஒருபோதும் தயங்கியதில்லை இப்போதும் நான் செய்வது தவறு என எனக்குத் திருப்தி ஏற்படும்படி சொல்லிவிட்டால் எனது முடிவை மாற்றிக்கொள்ளச் சித்தமாகவிருக்கிறேன்.

மேலும் சொன்னதாவது:—

'21 நாள் உபவாசத்தையும் சமாளித்துவிட எனக்குப் பூரண நம்பிக்கையிருக்கிறது. சனிக்கிழமை நடுராத்திரியில் நான் உபவாசத்தை மேற்கொள்ளுவதென்ற முடிவுக்கு வந்தேன். அதற்கு மூன்றுநாட்களாகஎனக்கு நல்ல தூக்கமேயில்லை. இவ்வித முடிவுக்கு வந்தபின் அன்றிரவு நான் நன்றாகத் தூங்கினேன்'

—

### மலாயா கொடுக்கப் போகும் ஈயம்.

எப்ரல் 26ந் தேதி ஹேய்க்கில் சர்வதேசக் சங்ககமிட்டி கூடியபோது ஜூலை 1ந் தேதி முதல் பொலிவியா 1244 டன், ஹாலண்டு பெல்ஜியம் கீழ் இந்திய தீவுகள் ஆகியவை 1068 டன் நைஜிரிய 286, டன் மலாயா 1927 டன் ஈயம்விகிதம் சப்ளை செய்வதாய் ஒப்புக்கொண்டிருப்பதா யறிவிக்கப்பட்டது.

—

### சென்னை சட்டசபை.

அடுத்த சென்னை சட்டசபைக் கூட்டம் ஜூலை 31ந் தேதி நடைபெறுமென்று தெரிகிறது.



### கல்கத்தா மேயர் பதவி.

கல்கத்தா, எப் 29—

காங்கிரஸ் அபேக்ஷகரும் மாஜிடிப்டி மேயருமான ஸ்ரீமான் சந்தோஷ குமார வாஸு கல்கத்தாக் கார்ப்பொரேஷன் மேயராகத் தெரிந்தெடுக்கப்பட்டார்.

# குமரன்

காரைக்குடி
ஸ்ரீமுக ஞு சித்திரைமீ உஉ

## திரு. ரங்கசாமி ஐய்யங்கார் ராஜீநாமா

காரைக்குடி முனிஸிபல் கௌன்ஸிலருள் ஒருவரான அட்வகேட் திரு ஏ. ரங்கசாமி ஐயங்கார் B. A., B. L., அவர்கள் தமது கௌன்ஸிலர் ஸ்தானத்தை ராஜிநாமா செய்திருப்பதற்குள்ள காரணம் ஊன்றி யோசிக்கத்தக்கதாகும்.

அவர் கௌன்ஸிலராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் பகுதி ஆறுவது வார்டாகும். தேர்ந்தெடுக்கப்படுகிற காலத்தில் தன்னைப்பற்றி யிருந்த அபிப்பிராயம் இன்னும் ஓட்டர்கட்கு இருக்கிறதா என்பதைப் புதிதாக அறிய அவர் விரும்புகிறார். அதில் முக்கியமான விஷயம் தீண்டாதவர் ஆலயப் பிரவேசத்தைப் பற்றியதாகும். திரு ரங்கசாமி ஐயங்கார் தீண்டாதவர் ஆலயப் பிரவேசத்தை ஆதரிக்கிறார். மேலும் தீண்டாமை விலக்குக் கிளைக்கமிட்டிக்குத் தலைவராகவுமிருக்கிறார். தாம் தேர்ந்தெடுக்கப்படுகிற காலத்தில் ஓட்டர்கள் தாம் இந்த மாதிரியான கொள்கையைக் கொள்ளக்கூடுமென்று எதிர்பார்க்காமலுமிருக்கலாம். அப்படியானால் அவர்களின் மனப்பான்மைக்கு மாறுபட்டு அவர்களின் பிரதிநிதியாக இருப்பது நியாயமல்ல வென்பதை யுணர்ந்தே திரு. ஐயங்கார் இந்த ஸ்தானத்தை ராஜீநாமா செய்திருக்கிறார். இது அவர்களுடைய பெருந்தன்மையையே காட்டுகிறது. கிடைத்த ஸ்தானத்தை ராஜீநாமா செய்வதென்பது ஒருசுலபமான காரியமல்லவென்பதையும் கொள்கைக்காக ஸ்தானத்தை ராஜீநாமா செய்வதென்பது பெரிய காரியமாகுமென்பதையும் நாம் பெரிதும் பாராட்டுகிறோம்.

இன்று இந்தியாச் சட்டசபைத் தலைவராக வீற்றிருக்கும் அன்பர் ஆர். கே. ஷண்முகம் அவர்கள் முன்னொரு முறை தமது அங்கத்தினர் ஸ்தானத்தை ராஜீநாமா செய்துள்ளார் என்பதை நினைப்பூட்ட விரும்புகிறோம். காங்கிரஸ்சார்பாகத் தேர்தலில்நின்று வெற்றிபெற்று அங்கத்தினராக வீற்றிருந்தார். சட்டசபை நுழைவுகூடாதென்று காங்கிரஸ் ஆணை பிறந்தது. பலர் ராஜீநாமா செய்தனர். சிலர் இருந்தபடியே யிருந்தனர். திரு. ஷண்முகமவர்கள் காங்கிரஸின் தீர்மானத்திற்குத் தம்மனச்சான்று இடந்தாவில்லையெனினும்காங்கிரஸின் சார்பில் கிடைத்த ஸ்தானத்தை உடனே ராஜீநாமா செய்தார். மீண்டும் அதே ஸ்தானத்திற்குத்தம் சொந்த ஜில்லாவில் நின்று போட்டி யின்றித் தேர்ந் தெடுக்கப்பட்டார்.

ஆனல் திரு ரங்கசாமி ஐயங்காரின் ராஜீநாமா விஷயத்தில் ஆறுவதுவார்டு வோட்டர்கள் என்ன செய்யப்போகிறார்களென்பதைப் பொறுத்திருந்து பார்ப்போம். திரு ரங்கசாமி ஐயங்கார் ராஜீநாமா செய்யாதிருப்பாராயின் ஓட்டர்கள் புதிய மனிதர்களைப் புகுத்த இடமேற்பட்டிருக்காதென்பதை உணரவேண்டும். ஒரு கொள்கைக்காக ராஜீநாமா செய்த ஸ்தானம் கொள்கைக்காகவே மீண்டும் கொடுக்கப்படுமானுல் அந்த வார்டு வோட்டர்கட்குப் பெருமை யுண்டு. போட்டி போட முன்வருபவர்களும் சிறிது கண்ணியமாக நடந்துகொள்ள வேண்டும். எழுந்தவர் இடத்தில் இருக்க நினைப்பது மட்டும் போதாது. தமது கொள்கைகளை நினைத்துப் பார்க்கவேண்டுமென்று எச்சரிக்கிறோம். யாரை வேண்டுமானாலும் அந்த வார்டு வோட்டர்கள் தேர்ந்தெடுக்க அவர்கட்கு உரிமையுண்டு. ஆனல் இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் சிறிது யோசித்துத் தங்கள் முடிவைச் செய்ய வேண்டுவது ஒவ்வொருவருக்கும் கடமையாகும். திரு ரங்கசாமி ஐயங்கார் மீண்டும் அபேக்ஷகராக நிற்பாரென்பதில் சந்தேகமில்லை. தீண்டாமை விலக்கில் ஈடுபட்டவர்கள் அவரை ஆதரிப்பது திண்ணமாகும். மற்றவர் அவரை ஆதரிக்க முடியாவிட்டால் தங்கள் கொள்கையில் உரமாக இருக்குமொருவரை அந்த ஸ்தானத்திற்கு அனுப்ப முயல்வது நேர்மையாக இருக்கக்கூடும். எந்தக் கொள்கையாளர் வந்தாலும் கண்ணியமாகவும் நேர்மையாகவும் இத்தேர்தல் நடைபெறுமானுல் எல்லாருக்கும் பெருமையுண்டு. இந்த சந்தர்ப்பத்தில் நகரத்தார்கள் செல்வ வளப்பத்தைக் காட்டவும் மற்றவர் பூரிவாங்குகிற தொழிலைக்கையாளவும் இட மேற்படாமல் பார்த்துக்கொள்ளுதல் அவசியமாகுமென்பதை வற்புறுத்திக்கூற விரும்புகிறோம்.

### காரைக்குடியில் ஹரிஜன தினம்.

ஞாயிற்றுக்கிழமை யன்று ஹரிஜன தினம் சிறப்பாக நடந்தது. காலையில் மாத்தூர் உள்ளூர் ஹரிஜன சிறுவர்கள் உள்ளிட்ட ஒருபஜனைக் கோஷ்டி நகரில் பல விடங்களில் ஊர்வலம் வந்தது. நண்பகலில் மீனாட்சி சினிமா தியேட்டரில் ஒரு சமபந்தி போஜனம் நடைபெற்றது. மாலையில் ஊர்வலமாரம்பமாகி முக்கிய வீதிகள் வழியாக சென்றது. உண்டியலும் வசூலிக்கப்பட்டது. ஊர்வல முடிவில் எல்லோரும் மகார்நோன்பு பொட்டலுக்கு வந்து ஒரு கூட்டம் நடத்தினார்கள். அதில் டாக்டர் சுப்பிரமணிய ஐயர் தலைமைவகித்தார். பலர் தீண்டாமை யொழிப்புப் பற்றிப் பேசினர். தோழர் லக்ஷ்மிரதன் பாரதி காரைக்குடி தீண்டாமைவிலக்கு சங்கம் செய்துள்ள வேலைகளை எடுத்துக் கூறினர். 8-30க்குக் கூட்டம் முடிந்தது.

### காங்கிரசுக்கு எதிராக ராணுவம்.

"ட்ரிபியூன்" பத்திரிகை எழுதுவதாவது:—காங்கிரசை எதிர்த்துப் போராட சர்க்கார் ராணுவத்தையும் உபயோகிப்பதாகத் தெரிகிறது. ரஜாவில் கிராமங்களுக்குச் செல்லும் சிப்பாய்கள் காங்கிரசிற்கு எதிரிடையான பிரசாரம் செய்ய வேண்டுமென்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அன்றி அவர்கள் தத்தம் கிராமங்களில் காங்கிரசிற்கு சாதகமாக யார் யார் வேலை செய்கின்றார்களென்பதையும் தெரிந்து படைத்தலைவருக்குச் சொல்ல வேண்டுமென்றும் ஏற்பாடாகி வருவதாகத் தெரிகிறது.

### மகாத்மா விடுதலை.

மகாத்மா 21 நாள் விரதமிருக்கத் தீர்மானித்திருப்பது பற்றி எங்கும் பரபரப் பேற்பட்டிருக்கிறது. விரதம் முடிவதற்குள் ஏற்படும் பலாபலன்களின் பொறுப்பை சர்க்கார் ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. ஆகவே அவர்கள் மகாத்மாவை விடுதலை செய்துவிடுவார்கள். மற்ற தேசியக் கைதிகள் விடுதலையடைய மார்க்கமில்லை என்று நம்பிக்கையுள்ள விடத்திலிருந்து தகவல் கிடைப்பதாக ஒரு பம்பாய் நிருபர் எழுதுகிறார்.

### உண்ணாவிரதி ரங்காவின் விடுதலை.

ராஜீய கைதிகளை சரியாக நடத்தாததுபற்றி காண்டுவா ஜெயிலில் சிலகாலமாக உண்ணாவிரத மிருந்து வந்த தேசத் பூனம்சந்து ரங்காவை விடுதலை செய்துவிட மாகாண கவர்ன்மெண்டு உத்தர விட்டிருக்கிறது.

### எம். என். ராய் அப்பீல்

திரு. எம். என். ராய்க்கு விதிக்கப்பட்டிருந்த 12 வருஷ தீவாந்தர சிட்சையை அப்பீலில் 6 வருடமாகக் குறைத்து விட்டார்கள்.

### சீர்திருத்த அரசியல்.

புதிய சீர்திருத்த அரசியலை யொட்டியுள்ள சட்டசபைகள் தேர்தல் வருகிற இலையுதிர் காலத்தில் நடைபெறக்கூடுமென்று ஒரு லண்டன் நிருபர் அறிவிக்கிறார்.

### இலுப்பைக்குடியில் உற்சவம்.

சித்திரை மீ 17 உ ஆரம்பமாகி நடைபெறுகிறது. 21 உ 5-ம் திருநாள் அம்மன் தபசு, 22 உ வெள்ளி ரிஷப வாகனம், 24 உ காலை சிதம்பர சேவை இரவு ரிஷப வாகனம், 25 உ தேர், 26 உ சப்தா வரணம், 27 உ தெப்ப உற்சவம்.

### ஸ்ரீமதி ஈ. வெ. ரா. நாகம்மாள்.

குடியரசு பத்திரிகையின் பதிப்பாளரும் பிரசாரகருமாகிய ஈரோடு ஸ்ரீமதி ஈ. வே. ரா. நாகம்மாள் ஜுரத்தால் வருந்துகிறார். இரவில் தூக்கமில்லை. வர வர ஜுரம்குறைந்து வருகின்றதென்று டாக்டர் அபிப்பிராயப்படுகிறார் என்று தெரிகிறது.

### பொதுநல சங்கம்.

காரைக்குடி பொதுநல சங்கத்தின் கூட்ட மொன்று 29-4-33ந் தேதி வாசகசாலையில் நடைபெற்றது. திரு. சி. மு. அரு. நாராயணன் செட்டியார் (திருப்பத்தூர் தாலூகா போர்டு உபதலைவர்) அவர்கள் தலைமை தாங்கினர். கூட்டமாரம்பிக்கு முன்னர் சங்கத்தலைவர் திரு. வி. வி. ராஜன் மலர்மாலை சூட்டி திரு. செட்டியாரவர்களை வரவேற்றார். முன்னுரையாக அவர்கள் தாம் தலைமைவகிக்கும்படித் தேர்ந்தெடுக்கப் பட்டதற்காக சந்தோஷத்தைத் தெரிவித்தார். பின்பு முனிசிபல் எஞ்ஜினியர் திரு. சிவராம கிருஷ்ணஐயர், திரு. தி. ம. நடராஜன், திரு. நடேச சர்மா ஆகியோர் சொற்பொழி வாற்றினர். பின் தலைவரின் முடிவுரையோடு கூட்டம் கலைந்தது.

### சுழல் காற்றால் 21 பேர் மரணம்

அமெரிக்காவில் அர்கான்ஸாஸ், லூஷியான ஆகிய விடங்களிலேற்பட்ட பெரிய சுழல் காற்றின் பயனுய் பெருத்த சேதம் மேற்பட்டிருப்பதாகவும் 25 பேர் மாண்டு போனதாகவும் தெரிகிறது.

### பர்மா பிரிவினை வாதம்

பர்மா இந்தியாவுடன் சேர்ந்திருக்கவேண்டுமா அல்லது பிரிவினையை விரும்புகின்றதா வென்று முடிவுகூறி விடும்படி சட்டசபைக்குக் கவர்னர் வேண்டு கோளனுப்பி விவாதிக்கச் சொன்னர். அதுபற்றிக் கூடிய சட்டசபை ஏப்ரல் 25ந் தேதி முதல் நடைபெற்று வருகிறது. 3 தினங்களுள் முடிக்கப்பட்டு விட வேண்டு மென்ற வாதம் இன்னும் முடியவில்லை. மே ஆறுந்தேதி வரையிலும் நடைபெறக் கூடுமென்று யூகிக்கப்படுகிறது. கவர்னர் அன்று முடிவாகாவிட்டால் சபையைக் கலைத்துவிடும்படி உத்தரவு போட்டிருக்கின்றென்று தெரிகிறது.

### இலங்கை இராமநாதபுரம் ஜில்லா ஆதிதிராவிட வாலிப சங்கம் கொழும்பு (கிளை)

மேற்கண்ட சங்கத்தின் விசேஷப் பொதுக்கூட்ட மொன்று தெமட்டக் கொடை 13-ம் நம்பர் ஹாலில் 4-5-33உ இரவு சுமார் தோழர் P. V. மாயன் அவர்களின் அவைத்தலைமையின் கீழ் நடைபெற்றது.

அவ்வமயம் ஈரோடு தோழர் இராகவன் அவர்களால் "சுயமரியாதைத் தத்துவம்" "தாழ்த்தப்பட்டோரின் முன்னேற்றம்" என்பதுபற்றி சுமார் 1½ மணிநேரம் கண்டோர் ஆனந்திக்குமாறு சொற்பொழி வாற்றியபின் கீழ்க்கண்ட இரண்டு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு அரசாங்க அதிகாரிகளுக்கு அனுப்பக் காரியதரிசி அவர்களுக்கு உத்தரவளிக்கப் பட்டது.

#### தீர்மானங்கள்.

(1) இராமநாதபுரம் ஜில்லா காரைக்குடியில் தீண்டாமை விலக்குப் பிரசாரஞ் செய்த தோழர்களான ப. ஜீவானந்தம் ராம. சுப்பையா, என். எஸ். கணபதி முதலியவர்களை அகாரணமாய் போலீஸ் அதிகாரிகள் அடித்ததைக் கேட்டு இக்கூட்டம் மிகவருந்துவதுடன், போலீஸ் மேல் அதிகாரிகளை அது விஷயமாய் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளக் கேட்டுக்கொள்வதுடன் தாழ்த்தப்பட்ட மக்களுக்காகப் பாடுபட முன்வந்த தோழர்களை அகாரணமாய் மிருகத்தனமாய் நடத்திய போலீஸ் சிப்பந்திகள் மீது தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளாவிடில் சீக்கிரத்தில் அரசாங்கம் தாழ்த்தப்பட்ட மக்களின் ஆதரவை இழந்து விடுமென்று அச்சாங்கத்திற்கு இச்சங்கம் எச்சரிக்கை செய்கிறது.

(2) இராமநாதபுரம் ஜில்லாவில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு உயர்குலத்தோர் என்று கூறப்படும் சில ஜாதியார்கள் இழைத்துவரும் கொடுமைகளை விசாரிக்க ஒரு கமிட்டி நியமிக்க வேண்டுமென்று சட்டசபையில் தீர்மானஞ் செய்திருந்தும் இதுவரை கமிட்டி யாதொரு வேலையும் செய்யாததைக்கண்டு வருந்துவதுடன் உடனே விசாரணை நடத்தும்படி ஏற்பாடு செய்ய இச்சங்கம் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறது.

### தற்கால நாகரிகத்தைப்பற்றி ஜார்ஜ் பர்னார்டுஷா.

உலகில் பல பாகங்களை சுற்றிப்பார்த்து வரும் ஜார்ஜ் பர்னார்டுஷா அவர்கள் தம் அனுபவத்தைக் கொண்டு நாகரிகமுள்ள ஜனங்களைப் படுவோர்களிடை சந்துஷ்டியே காணப்படவில்லை யென்றும், நாகரிகம் காணுத மக்களே சந்தோஷமாக வாழ்கின்றார்களென்றும் கூறினர்



### தஞ்சையில் ராமநாதன் பார்க்

தஞ்சை நகரசபைக் கூட்டம் ஏப்ரல் 29ந் தேதி நடைபெற்ற போது சிவகங்கைப் பார்க்கு (தோட்டம்) என்று அழைக்கப்பட்டு வந்த தோட்டத்தை, முனிசிபல் சேர்மன் ராவ்பகதூர் ராமநாதன் செட்டியாரவர்களுடைய அரிய ஊழியம் கருதி, அவரை கவுரவிக்கின்ற முறையில், ராமநாதன் பார்க் என்று அழைக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

### ஆவினிப்பட்டி

**விவேகானந்தர் கல்விக் கழகம்:--** இக்கழகத்தின் 6-ம் ஆண்டு 11-ம் மாதக்கூட்டம் சென்ற 29—4—33-ல் நடைபெற்றது. அது காலை கீழச்சிவற்பட்டி சான்றோர் திரு. மு. லெ. சோமசுந்தரஞ் செட்டியார் அவர்கள் தலைமை வகித்தார்கள். மாணவர் தமிழ்மறை கூறியபின் திரு. கரு. பெரியகருப்பன் 'செட்டியாரவர்கள் தலைவருக்கு நல்வரவேற்புப் பத்திரம் படித்து நல்கினர்கள். தலைவர் கல்வியினவசியத்தையும், செந்தமிழ் நாட்டவர் தமிழையே முதலிற் கற்கவேண்டுமென்பதையும் வலியுறுத்திப் பேசியபின், தமிழ் மொழி பயிலுமுறை, காளமேகப் புலவர், ஒளவையாரின் செவ்விய போதம், தமிழ் மொழிப் பெருமை, சிவபூஜை பொருஞ் சீரிய இன்பமே என்றபொருள்கள் பற்றி மு. சுப்பையா, வி. அழகப்பன், முரு. சேதுராமன், இ. சுப்பையா, மு. கனகசபை என்னும் மாணவர் யாவரும் இன்புற விரித்து விளக்கிப்புகன்றார்கள் ஆசிரியர் வ. மு. இரத்தினேசுவரையரவர்களால் "கற்றுய்ந் தொழுகல்" என்னும்பொருள்பற்றி ஒரு சொற்பொழிவு பல ஆதாரங்களுடன் செய்யப் பெற்றது. தலைவர்பேசிய விஷயப் பொலிவுகளைக் குறிப்பிட்டுப் பேசினர். கற்றுய்ந்து நடப்பது மக்களுக்கு மாண்பளிக்கும் என்றும் கல்லார் விலங்கினுங் கடையராவர் என்பது பெரியார் கருத்தென்றும் காட்டினர். மேலைநாடுகளின் முன்னேற்றங் கல்வியானுயது என்றும் ஆகாயக்கப்பலின் வருகையால் பழைய சரித்திரங்களின் உண்மை வெளியாகுமாற்றையும் இந்தியச் சிறார்கள் உடல் வலியைப்பேணி கலையறிவைப் பெற வேண்டுமென்பதையும், ஆண்,பெண்கள் என்ற இருபாலாரும் அறிவை வளர்க்க முன்வரவேண்டு மென்பதையும் உபமான முகத்தானே விளக்கினர். பின் தலைவர் முடிப்புரையை முடிக்க வந்தன வாழ்த்துடன் சபை நிறைவுற்றது.

**கழகத்தின் நேர்பாதைக்குத் தடை:-** பல வருஷங்களாக கழகத்தில் முகப்பிற்குச் செல்லும்பாதை நன்கு அமைந்திருந்தது. தற்சமயம் அது சில கற்களை நாட்டித் தடைசெய்யப்பட்டிருக்கிறது. பொது தர்மத்திற்கு இருக்கும் மதிப்பு என்னே? கவனிப்பது யாரோ?........... —நன்மை நாடி.

### மதிப்புரை.

#### ஸ்ரீமுக காலண்டர்.

ரங்கூனில் பலவிதமான வியாபாரம் செய்துவரும் ராம. செ. ராம. செல்லப்ப செட்டியாரவர்களால் வெளியிடப்பட்டிருக்கும் காலண்டர்நமதுபார்வைக்கு வரப்பெற்றோம். தமிழ், ஆங்கிலம், பர்மா தேதிகளும் திதி நக்ஷத்திரம் விசேடக் குறிப்புகளுடன் தினமொன்று ஒரு இதழ் வீதம் அமைக்கப்பெற்றிருக்கிறது. மிகவும் உபயோகமான முறையில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். மூன்று வர்ணச் குமரன் படமும் காந்தியடிகள் ஜவஹர்லால்நேரு ஆகியவர் படமும் விளங்குகின்றன. விலை அணு 6

# காரைக்குடி ஸ்ரீ மீனாக்ஷி பெண்பாடசாலை

## 15வது ஆண்டு நிறைவுவிழா

காரைக்குடி ஸ்ரீ மீனாக்ஷி பெண் பாடசாலையின் 15வது ஆண்டு விழா 2—5—33 செவ்வாய்க்கிழமை காலை 8-3 மணிக்கு ஷை பாடசாலைக் கட்டிடத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. ராமநாதபுரம் டிஸ்டிரிக்ட் அண்டு செஷன்ஸ் ஜட்ஜ் ஸ்ரீமான் கே. எஸ். ராமசாமி சாஸ்திரிகள் பி. ஏ. பி. எல். அவர்கள் தலைமை வகித்தார்கள். தனவணிகப் பிரபுக்களும், உத்தியோகஸ்தர்களும் இதர கனவான்களும், சீமாட்டிகளும் விஜயம் செய்திருந்தனர். தலைவர் மேளதாளத்துடன் வரவேற்கப்பட்டதும் கடவுள் வாழ்த்து பாடப்பெற்று விழா ஆரம்பமாயிற்று. பின்னர் பள்ளிக் கூடச் சொந்தக்காரரும் திருப்பத்தூர் தாலூகா போர்டு அங்கத்தினருமான உயர் திரு மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியாரவர்களால் தலைவருக்கு உபசாரப் பத்திரம் வாசிக்கப் பெற்று தலைவர் அவர்கள் முன்னுரையாக சில வார்த்தைகள் கூறினர். அதன் பிறகு காரைக்குடி முனிசிபல் கவுன்சிலர் உயர்திரு மெ. செ. ராமசாமி செட்டியார் அவர்களால் வருஷாந்திர அறிக்கைப் பத்திரம் வாசிக்கப்பட்டது.

#### அறிக்கையின் சாரம்.

இந்தப் பாடசாலை திரு மெ. செ. மெ. மெ. சொக்கலிங்கம் செட்டியாரவர்களால் 1917ஞு நவம்பர்மீ 2உ முதல் நடத்தி வரப்படுகிறது. 23000ரூபா செலவிட்டுக் கட்டிடம் கட்டப்பட்டிருக்கிறது. அக்கட்டிடத்துக்கு 20-12-1916ல் சென்னைக் கவர்னர் கோஷன் பிரபு அஸ்திவாரக் கல் நாட்டினர். 1-2-1918ல் இராமநாதபுரம் ராஜா அவர்கள் கட்டிடத்தைத் திறந்துவைத்தார். திரு. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் காலஞ்சென்று விட்டனர் இப்பொழுது அவரது குமாரர் திரு. மெய்யப்பசெட்டியாரவர்கள் நடத்தி வருகிறார்கள்.

நடப்பு வருஷத்தில் கற்றுவரும் மாணுக்கியர் தொகை 335. இதில் நகரத்தார் பெண்கள் 128. பிராமணப்பெண்கள் 97. இதர மரபு 110 முதல்வகுப்பு முதல் எட்டாவது வகுப்புவரையுண்டு. சம்பளமில்லை. புத்தகங்கள் முதலியன இனமாகக் கொடுக்கப்படுகின்றன.

தலைமை வாத்தியாருள்பட எட்டு ஆசிரியர் இருக்கின்றனர். இவர்களுள் ஐவர் உபாத்தியாயினிகளாவர் நான்காவது வகுப்பு முதல் ஆங்கிலமும் கற்பிக்கப்படுகிறது. 744 புத்தகங்கள் கொண்ட லைப்ரரி இருக்கிறது. நடப்பு வருஷத்தில் ரூபா 4042-9-7 செலவாகியிருக்கிறது.

பிறகு மாணவிகளால் தைத்தல்டிராயிங் முதலிய பயிற்சிகள் காண்பிக்கப்பட்டன. மாணவிகளால் கடவுள் மகிமை, ஸ்திரீதர்மம், புருஷதர்மம், ஜீவகாருண்யம், பெண்கல்வி, செல்லம், Work of god, தாலாட்டு the fish வண்ணத்திபாட்டு முதலியன ஆங்கிலம் தமிழ் வடமொழி ஆகியபாஷைகளில் நடித்தும் படித்தும் காட்டப்பட்டன. பார்வதி கலியாணம் கதாரூபமாகச் செய்து காட்டப்பட்டதும் காலைவிழா முடிவுபெற்றது.

பிற்பகல் 3 மணிக்கு மேல் மறுபடியும் விழா தொடங்கிற்று. மாணவிகளால் துருவசரித்திரம் நாடகரூபமாக நடிக்கப்பட்டது. கோலாட்டம் கும்மி, டிரில் நடைபெற்றதும் மாணவிகளுக்குத் தலைவரவர்களால் பரிசளிக்கப் பெற்றது. மதுரை அட்வகேட் திரு. T. C. சீனிவாசய்யங்கார் வக்கீல் திரு. கிருஷ்ணமூர்த்தி அய்யர், ஸ்ரீரங்கம் திரு. பாலசுப்ரமணிய அய்யர் ஆகியோர் ஷை பெண்பாடசாலை நம்நாட்டிற் கேற்ப உயர்தர முறையில் நடைபெற்று வரினும் இன்னும் இந்த ஸ்கூல் எக்தெந்த விதங்களில் அபிவிருத்தியடைய வேண்டுமென்றும் நாட்டில் ஒற்றுமை ஏற்பட ஸ்திரீகளே முக்கியஸ்தர்களாதலால் அவர்களுக்கு சிக்கனம் முதலியன கற்றுக் கொடுக்கவேண்டும் இந்தஸ்கூலுக்கு விளையாடும் மைதானம், புத்தகசாலை முதலியன ஏற்படுத்தப்பட்டு தாய்த் திருநாள்கொண்டாடப்படவேண்டுமென்றும் கூறினர்கள். பின்னர் தலைவர் முடிவுரை கூறினர்.

ஹெட்மாஸ்டர் அவர்களால் தலைவரவர்களுக்கு உடையோளர்களுக்கும் வந்திருந்த கனவான்களுக்கும் வந்தனம் கூறப்பெற்று இராஜாவாழ்த்துடன் விழா முடிவுற்றது.

### வைகுண்டத்தில் ஹனுமான்.

ஸ்ரீ வைகுண்டம் கோவில் சந்நிதியில் சில நாட்களாக குரங்கு மூஞ்சியும் கோரப்பற்களும் மனித வுருவமுமுடைய ஒரு விசேஷ உருவம் காணப்படுகிறது. இது திடீரென எதிர்பாராத நிலைமையில் எவர் பேரிலாயினும் பாய்ந்து படுகாயப் படுத்தி ஹிம்சை செய்து விட்டு குரங்கு முகம் களிக்கக் குதூகலமடையும். சமீபத்தில் திருவிழாவுக்கு வந்த பலரை காயப்படுத்தி விட்டது. இந்த உருவத்தை அவ்வூர் ஜனங்கள் பிடித்து ஒரு கட்டிடத்தில் அடைத்து வைத்திருக்கின்றார்கள். தினசரி ஏராளமான ஜனங்கள் பார்த்து வருகின்றனர் என்று சொல்லப்படுகிறது

### கப்பற் செய்தி

கப்பல்கள் நாகப்பட்டினத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விவரம் வருமாறு:—

| கப்பல் பெயர் | புறப்படுந்தேதி |
|---|---|
| ரஜுலா | 29—4—33 |
| ரோணு | 13—5—33 |
| ரஜுலா | 27—5—33 |

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டினத்துக்கு வரும் விவரம்

| கப்பல் | வருந்தேதி |
|---|---|
| ரோணு | 3—5—33 |
| ரஜுலா | 17—5—33 |
| ரோணு | 31—5—33 |

### ரெயில் வண்டியில் 125 குண்டுகள்.

மைமன்சிங், ஏப் 29—

28ந்தேதி டக்காவிலிருந்து வந்ததொரு ரெயிலை சுதிகாலி என்ற ஸ்டேஷனில் சோதித்தபோது ஒரு பங்கிலிருந்து 125 துப்பாக்கிக்குண்டுகள் போலீஸாரால்கண்டு பிடிக்கப்பட்டன. இது சம்பந்தமாக ஒருவர் போலீசாரால் கைதுசெய்யப்பட்டார்.

### செய்கோன் செட்டியார்கள் உறுதி

செய்கோன் செட்டியார்கள் இனி கடன்காரர்கள் மீது நடவடிக்கை யெடுத்துக்கொள்வதில்லை என்றும்சர்க்கார் போடும் உத்தரவுக்கு இணங்கி நடக்கச் சம்மதித்திருப்பதாகவும் சொல்லப்படுகிறது.

### நோட்டீஸ்.

இராமநாதபுரம்ஜில்லா காரைக்குடியிலிருக்கும் யெக்னமய்யர் குமாரர் யெ. சுந்தரமய்யராகிய நான் இதன் மூலம் தெரிவிப்பது என்னவென்றால்

யெனக்கு தற்காலம் மூன்று குமாரர்களிருக்கிறார்கள் அவர்களில் மூத்த குமாரனுகிய சுப்பிரமணியனுக்கு 17 வயது ஆரம்பமாகிறது அவனுக்கு கலியாணமாகியிருக்கிறது இன்னம் ருது சாந்தியாகாமலு மிருக்கிறது. ஷை சுப்பிரமணியனுக்கு சம்பாத்தியம் செய்வதற்காவது குடும்ப மானேஜ் செய்வதற்காவது திறமைகள் இல்லாததினுல் யென்னுடைய சவரக்ஷணையிலிருந்து வருகிறான்.

யெனக்கு பிதுரார் ஜிதசொத்தாக கழனிவாசலில் அரைக்கால் பங்கும் ஷை யூரிலுள்ள வீட்டில் 4-ல் ஒருபாகமும தாணியிக்கிறது நான் சிறுவயது முதல் சம்பாத்தியங்கள் செய்தும் கலியாணம் முதலியவைகள் செய்து கொண்டும் குடும்பகால க்ஷேபங்களை நடத்தியும் வந்திருக்கிறேன். ஷை யென்மூத்த குமாரனுக்கு கலியாணம் முதலிய சுபகாரியங்களையும் நானே யென் சொந்த அயிவேஜியிலிருந்து நடத்தியு மிருக்கிறேன். யென் வசமிருக்கிற சொத்துக்கள் அயிவேஜிகள் வகையாரா பூராவும் யெனக்குச் சொந்தப் பாத்தியமாயுள்ளவைகள். அவைகளில் யென் குமாரர்களுக்கு யெவ்விதமான பாத்தியமும் கிடையாது.

கொஞ்சகாலமாக யென் மூத்தகுமாரனை சுப்பிரமணியன் துஷ்டர்களின் சேர்க்கையினுல் தாசிகள் வீடுகளுக்குப் போவதும் மோட்டார்கள் ஓட்டுவதும் சீட்டாட்டம் முதலியவைகளுக்குப் போவதும் சில சமயங்களில் ஷை சிலவுகளுக்கு யென்வீட்டிலுள்ள சாமான்களை யெனக்குத் தெரியாமல் கொண்டுபோய் ஈடுவைத்தோ அல்லது குறைந்த விலைக்கு விற்பனை செய்தோ துகைகள் வாங்கி துருகிருத சிலவுகள் செய்துகொண்டு மிருக்கிறான். ஷையான் ஒழுக்கம் தவறியவனும் கெட்டவர்களின் சேர்க்கையுள்ளவனும் லாப நஷ்டங்கள் இன்னதென்றறியாத நிலைமையில் யார் யென்ன விதமான ஆசைவார்த்தைகள் சொன்னுலும் நம்பிக்கொண்டு வெற்றுக் காகிதங்களிலோ அல்லது சொல்ப துகையைக்கொடுத்து ஜாஸ்தி துகைகளைக்கண்டு யெழுதும் லெட்டர்கள் அண்டிமென்கள் முதலியவைகளில் கையெழுத்துகள் போட்டுக்கொடுப்பதற்குத் தயாரிருப்பது போலவும் தெரிகிறது. ஷையானுல் யெனக்கு குடும்பத்துகாவது அல்லது அவனுடைய தேவைக்காவது கடன்கள் வாங்க வேண்டிய அவசியம் யேற்படவில்லை.

இந்த நிலைமையில் ஷைசுப்பிரமணியனுல் யேற்படக்கூடிய தஸ்தவேஜுகள் முதலியவைகளுக்கு நானுவது யென் சொத்துக்களாவது பிதுரார்ஜித சொத்தில் யென் ஜீவகாலத்துக்குப் பிறகு அவனுக்கேற்படக் கூடிய பாகமாவது யெவ்விதத்திலும் கட்டுப்படுத்தக்கூடியதுமில்லை யென்பதை இதன் மூலம் சகலருக்கும் அறிவித்திருக்கிறேன்.

எ. சுந்தரமய்யர்.
மகர்நோன்பு அக்கிரகாரம்
காரைக்குடி

# மோட்டார்ச் செய்திகள்.

**வேகம் காட்டும் வெளிச்சம்:—**

இங்கிலாந்திலுள்ள கால்நடை சங்கத்தார் மோட்டார் வண்டிகளின் வேகத்தை தடைசெய்யப் பலவிதங்களிலும் முயன்று வருகிறார்கள். சமீபத்தில் "டெல் டேல்" என்ற பெயரோடு ஒரு விளக்கைக் கண்டு பிடித்தார்கள். அவ்விளக்கு இங்கிலாந்து சட்டப்படி பதிவுசெய்யப்பட்ட மோட்டார்கட்கு இணைக்கப்பட்டிருகின்றன. ஸ்பீடாமீட்டருக்கும் அவ்விளக்குகட்கும் சம்பந்த முண்டுபண்ணப் படுகின்றது. ஆகவே அவ்விளக்கு கார் சாதாரணவேகத்தோடு ஓடும்போது சும்மாயிருந்துவிட்டு மட்டுக்குமிஞ்சிய விசையைக் கைக்கொள்ளும்போது எரியத் தொடங்குகின்றது. ஆதலால் ஒரு கார் அளவுக்கு மிஞ்சிய வேகத்தோடு போகின்றதென்பது டிரைவர், போலீசார், கால் நடைக்காரர் முதலியவர்கட்குத் தெரியும்.

**வழுக்கான ரஸ்தாவுக்கு அபராதம்:—**

ஒரு பர்லின் மோட்டாரோட்டி நீண்ட நாளையபோராட்டத்தின்பின்னர் நகரஅதிகாரிகளிடமிருந்து நஷ்டத்தொகை யொன்றை வாங்கிவிட்டான். அவன் 1931ம் வருடம் ரஸ்தாவழியாகப் போய்க்கொண்டிருந்தபோது மழையால் ரோடு நனைந்திருந்த காரணத்தால் வண்டி வழுக்கிப் போய் கைக்கடங்காமல் பக்கத்தில் சென்றுகொண்டிருந்த ஒரு பஸ்ஸின்மீது மோதிற்று. இதற்காக அம்மோட்டாரோட்டி முனிசிபாலிடியின் மீது வழக்குத் தொடர்ந்து முனிசிபாலிடியின் கவனக்குறைவே ரோடு வழுக்கலாயிருப்பதற்கும் ஆகவே கார் தவறிப் போவதற்கும் காரணமென்று கூறி வாதாடினன். நீதிபதி அவன் கோரிய நஷ்டஈட்டைக் கொடுக்கச்சொன்னார்.

**நிலக்கரி வளி:—**

நிலக்கரி வளியை மோட்டார் கார்கட்கு உபயோகிக்கும் வழக்கம் இங்கிலாந்தில் விரைந்து பரவி வருகின்றது. லண்டன் நியூகாசில், பெர்மிங்ஹாம், ரோதர்ஹாம் ஆகிய விடங்களில் எண்ணிறந்த பஸ்கள் நிலக்கரி வளியால் ஓடுகின்றன. பெட்ரோல் டாங்குகட்குப் பதிலாக அம்மோட்டார் கார்களில் அரை டஜன் உலோகப் புட்டிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அப்புட்டிகளில் மீண்டும் வளி (காஸ்) அடைக்கப்பட வேண்டும்போது மோட்டார் காஸோமீட்டருக்குக் கொண்டுபோகப்படுகின்றது. இவ்வித மோட்டாரில் முக்கியமாக வேண்டுவது வளியின் அழுத்தத்துக்கு உறுதியாய் நிற்கத்தகுந்த திண்மையுடைய புட்டிகளே. அதற்காக உலோகக் கலப்பில் ஒரு புதுவிதமான புட்டியைச் செய்திருக்கிறார்கள். இது எவ்வளவு அழுத்த மேற்பட்ட போதிலும் பலம் செய்யும். இதற்கு 5000 ராத்தல் அழுத்த பலமுண்டென்று சொல்லப்படுகிறது. அன்றி அப்புட்டிகளிலிருந்து காஸ் போய்விடாதபடியும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இன்னும் கொஞ்ச நாட்களுக்குள் பெட்ரோல் பரபரப்பு நின்று போகும். நிலக்கரிச் சரக்கின் உபயோகம் தலையெடுத்துவிடுமென்று ஊகிக்கப்படுகிறது.

**சீன மாதிரியாகிறது:—**

சீன அரசாங்கம் ஒரு போது லாட்டரி (அதிர்ஷ்டச் சீட்டு) ஏற்பாடு செய்து வருகிறது. அதன் வருமானத்தின் ஒரு பகுதியை பரிசுகட்காக விநியோகம் செய்துவிட்டு, மற்றப் பகுதியை ஆகாய விமானமரஸ்தாக்க காரியங்களில் அபிவிருத்திக்காக உபயோகிக்க நிச்சயித்துள்ளது.

**மோட்டார் வரியின் பிரயோசனம்:—**

சுவீடன் தேசம் போக்குவரவு சௌகரியத்திற்காக அந்நாட்டில் 2500 மைல் நீளத்தில் புதுரோடு போட நிச்சயித்துள்ளது. இதற்கு ஆகும் செலவு 12 கோடி 50 லட்சம் கிரவுன்களாம். இந்த செலவை அவர்கள் மோட்டார் வண்டிகளின் வரியிலிருந்து எடுத்துக்கொள்ள தீர்மானித்திருக்கிறார்கள்.

**சுண்டேலிப்புரட்சி**

ஒரு சுண்டெலி சௌத் எண்டு என்ற விடத்தில் (சென்ற ஜனவரி மாதம்) ஒரு தெருமுழுவதிலு முள்ள போக்குவரவைத் தடைசெய்து பலருக்குக் காயத்தைக் கொடுத்து பெரிய குழப்பத்தை யுண்டுபண்ணி விட்டது. ஒருநாள் சில பெண்கள் ரோடுவழியாகப் போய்க்கொண்டிருந்தபோது ஒரு சுண்டெலி தரைக்குள்ளிருந்து மண்ணைத்தோண்டியது. அதுகண்ட பெண்கள் விஷயத்தை சரியாயுணர்ந்து கொள்ளாது கூக்குரலிட்டனர். உடனே அங்கு சென்று கொண்டிருந்த இரண்டு மோட்டாரோட்டிகள் திடீரென்று தம் கார்களை நிறுத்தமுயற்சித்ததில் இருகார்களையும் மோதிக் கொண்டனர். அதே சமயத்தில் அங்கு சென்றுகொண்டிருந்த டிராம் வண்டியின் டிரைவர் டிராமை திடீரென நிறுத்த முயற்சிக்க அதிலிருந்த எல்லோரும் கீழே எறியப்பட்டார்கள். இந்தக் குழப்பத்திற்குள் சுண்டெலி வெளிப்பட்டு சாக்கடையில் பதுங்கிக்கொண்டது.

**யானையின் செயல்:—**

மேற் குறிப்பிட்ட சம்பவம் நடைபெற்ற அன்று ஒரு யானை தெருவழியாக நடத்தப்பட்டபோது ஒரு சாதாரணப் பெண் அதனைக் கொண்டு பயந்து சத்தம் போட்டுக் கொண்டு ஓடிக் கீழே விழுந்தாள். அவள் விழுந்த 10 நிமிஷமானதும் நூற்றுக்கணக்கான வண்டிகள் ரோடில் கூடிவிட்டன.

—

## புதுமாதிரி விமானம்.

ஒரு புதுமாதிரி ஆகாய விமானம் வினர்டிலாவிர் வாவால் கட்டப்பட்டிருக்கிறது. மேலும் கீழும் பக்கவாட்டிலும் இஷ்டப்படி நொடிப்பொழுதில் திருப்பக்கூடிய விசை இதில் அமைந்திருக்கிறது. 5 கஜதூரம் ஏறுவதற்குள் மணிக்கு 5முதல் 100க்கு மேல் வேகத்துடன் பறக்க ஆரம்பித்துவிடும். இறங்கும்போதும் சுலபமாக தத்துக்கிளிபோல் இலேசாக இறங்கமுடியும். 5 பிரயாணிகளை ஏற்றிச் செல்லக்கூடிய விமானங்களுக்கு ஆகாய மந்திரி ஆர்டர் செய்திருக்கிறார்.

ராணுவ முஸ்தீப்புகளுடன் கூடியதும் மணிக்கு 250 மைலில் பறக்கக் கூடியதும், உலகத்திலேயே அதிவேகமாகச் செல்லும் ராணுவ விமானமுமாகிய ஒரு புதுவகை விமானம் ஆகாய மந்திரியின் விருப்பப்படி தயாராகி வருகிறது. இதற்கு ரோல்ஸ் ராய்ஸ் இஞ்சின் மாட்டிவிட்டால் மணிக்கு 212 மைல் வேகம் ஏற்படும். 10 நிமிஷத்தில் 20ஆயிரம் அடி உயரம்போகமுடியும். கீழே இறங்கும் வேகம் மணிக்கு 400 மைலுக்கு அதிகமிருக்கும்.

—

## தேவகோட்டை

**தாலூகா போர்டு:—** திருவாடானை தாலூகா போர்டின் கூட்டமொன்று தேவகோட்டை எட்வர்டு ஹாலில் 25—4—33 காலை 10மணிக்கு ஜமீன்தார் குமாரர் திரு. சோமநாதன் செட்டியார் எப். பி. ஈ. ஈ. தலைமையில் நடைபெற்றது. 12 மெம்பர்கள் வந்திருந்தனர். திரு. வி. சுந்தரம் அய்யர் பி. ஏ. ராஜவிஸ்வாஸப்பிரமாணம் செய்தார். ராமநாதபுரம் ஜில்லா கல்வி ஸ்தாபனத்திற்கு ஸ்ரீமான் லூர்டஸ் ராஜாவின் பெயரை ஜனாப் சையது முகம்மது சாகிப் பகதூர் பிரேரித்தார். அதை திரு வி. சுந்தரம் அய்யர் ஆமோதித்தார். ஏகமனதாக அங்கீகரிக்கப்பெற்றது. புதிய வருஷத்திற்குக் காகிதம் அச்சு வேலை சம்பந்தமான டெண்டர்கள் பரிசிலனை செய்யப்பட்டன.

**ஒரு விருந்து:—** ராமனுதபுரம் ஜில்லா போர்டுக்குப் போட்டியன்னியிலும் திருவாடானைத் தாலூகா போர்டுக்குப் பெரும்பாலான ஓட்டுகளாலும் தேர்ந்தெடுக்கப்பெற்ற தேவகோட்டை பாங்கர் ஸ்ரீமான் வி. ஏ. டி. என். நடேசன் செட்டியாருக்குத் தேவகோட்டை நகரத்தார் ஹாலில் 26—5—33 இரவு ஒரு விருந்து நடத்தப்பெற்றது. திருவைபிள்ளையார் கோவிலில் விசேஷமான அபிஷேகங்களும் நடைபெற்றன. விருந்துக்கு உள்ளூர் வெளியூர்களிலிருந்து அநேக கனவான்கள் வந்திருந்தனர். (ஒரு நிருபர்)

—

மங்கன்:—களிமண் எங்கே கிடைக்கும்?

வம்பன்:—உன் மூளையில்

—







## இந்தியா மந்திரி மீது தாவா.

லாகூரைச்சேர்ந்த பிரபல ஜோசியரான பண்டித அனந்தராம் என்பவர் தாம் லாகூரிலிருந்து ஜம்முக்கு ரெயிலில் ஒரு நேர் வண்டியில் பிரயாணஞ் செய்கையில் அந்த வண்டி முரட்டுத்தனமாக மெயில் வண்டித் தொடரில் கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டதென்றும், அப்பொழுது தாம் தமது படுக்கையிலிருந்து கீழே தூக்கியெறியப்பட்டு போனதாகவும் இதனால் தமது முதுகெலும்பு முறிந்துபோயிற்றென்றும் வேறு சில காயங்கள் ஏற்பட்டதென்றும் இதனால் தமக்கு 50 ஆயிரம் ரூபாய் நஷ்டஈடு கொடுக்கும்படி இந்தியா மந்திரிக்கு உத்திரவிட வேண்டுமென்றும் சொல்லி இந்தியா மந்திரி மீது வழக்குத்தொடர்ந்திருந்தார். இந்த தாவாவில் லாகூர் முதல் வகுப்பு சப் ஜட்ஜு சர்தார் ஹரிநாமசிங் தீர்ப்புக்கூறினார். வாதி முதலில் 50000 ரூபாய் நஷ்டஈடு கேட்டாலும் அதனைப்பிறகு 25000 ரூபாயாகக் குறைத்துக்கொண்டார். சப் ஜட்ஜ் பிரதிவாதிக்கு 9500 ரூபாய்வரை நஷ்டஈடுகொடுக்கவேண்டுமென்றும் வீதாசாரப்படி செலவு தொகை கொடுக்கவேண்டுமென்றும் தீர்ப்புக்கூறினர்.

—

## "1934 ஜனவரியில் உலக யுத்தம்"

திருநெல்வேலி ஜில்லா திருக்குற்றாலத்திலிருக்கும் இராமநாதசாமி என்பவர் வரப்போகிற மார்கழிக்கும் தை மாதத்திற்குமிடையில் (1934 ஜனவரி பெப்வரியில்) உலகில் பெரிய யுத்தம் நடைபெறக்கூடுமென்றும் அதற்குக் காரணம் ஜர்மனி, மகாத்மாகாந்தி போன்ற பெரியார்களை செய்யும் தவமேயென்றும் பத்திரிகைகட்கு அறிவிக்கிறார்.

—

## ராஜீய கைதிகள் விடுதலை

சிட்டகாங், எப் 28

சிட்டகாங்கில் பிரபல ஜோஸ்யராக விருக்கும் திரு. ஹரிபாத சாஸ்திரி என்பவர் இந்திய ராஜீய சம்பவங்களைப் பற்றி ஒரு ஜோஸ்யம் சொல்லியிருக்கிறார். அவர் இந்திய சுதந்தரப் போராட்டத்துக்கு 1933ம் வருஷம் ஆகஸ்டிலிருந்து 1934ம் வருஷம் ஜனவரிக்குள் ஒரு புதிய நிலை ஏற்படுமென்றும், அப்போது ராஜீயச் சிறையாளர்கள் விடுதலை செய்யப்படுவார்கள் என்றும் முக்கியமாக காந்திஜிக்கும் திரு. சென்குப்தாவுக்கும் அந்த சமயம் நல்ல காலமாக விருப்பதாகவும் கூறியிருக்கிறார்.

—

## விதேச ஜவுளிக்கடைகட்குப் பயமுறுத்தல்கடிதம்.

காடியாடிலுள்ள விதேசஜவுளிக் கடைக்காரர்கள் இந்தியத் துணிகளை விற்பனை செய்ய மே 1ந் தேதி முதல் தொடங்கவில்லையானால் கடைகட்கு நெருப்பு வைக்கப்படுமென்றும், வியாபாரிகளின் உயிர் வாங்கப்படுமென்றும் பயமுறுத்தல் கடிதங்கள் அனுப்பப் பட்டிருக்கின்றன.

—

## ஜர்மனியில் யூதர் அவஸ்தை.

தற்போதிய ஜர்மன் சர்வாதிகாரியான ஹிட்லர்கக்ஷி யூதர்கட்குப் பெரும் பெரும் தீங்கை இழைத்து வருகிறது. கணிதசாஸ்திர நிபுணராகிய இன்ஸ்டீனை யூதரென்ற காரணத்தால் ஓட்டிவிட்டது. பலர் நாட்டைவிட்டு ஓட்டப்பட்டனர். ஜார்ஜ் பர்னர்டுஷாவின் சில புத்தகங்கள் தடை செய்யப்பட்டன. இப்போது இதை விட பிரமாதமாக, பள்ளிக்கூடங்களில் யூதப்பிள்ளைகள் அனுமதிக்கக் கூடாதென்று உத்தரவிடப்பட்டிருக்கிறது.

—

## இங்கிலாந்து-இந்தியா டெல்போன்.

இங்கிலாந்தில் எந்தப் பகுதியிலுமிருந்து பம்பாயுடன் ரேடியோ மூலம் டெலிபோன் போக்கு வரத்து வசதி செய்யப்பட்டுள்ளது. மே 1ந்தேதி அது ஆரம்பிக்கப்பட்டது. அதில் பேசுவதற்கான கட்டணம் 3 நிமிஷத்துக்கு 6 பவுன்கள் ஆகும்.

## வெள்ளியின் புதிய அந்தஸ்து.

வாஷிங்டன், ஏப் 27—

அமெரிக்க பிரசிடெண்டு தமது உசிதப்படி திரும்பவும் வெள்ளி நாணயங்கள் அச்சுப்போடவும், அவர் அவசியமென்று நினைக்கிற அளவுக்கு அந்நாணயத்திற்கும தங்கத்துக்கும் உள்ள பரஸ்பர மதிப்பை நிர்ணயிக்கவும், வரையறையில்லாமல் தங்கம் வெள்ளி கொடுப்போர்க்கெல்லாம் நாணயங்கள் அச்சுப்போட்டுத் தரவும் அதிகாரம் கொடுத்து ஒரு திருத்தம் இன்றையதினம் அமெரிக்க செனேட்டில் நோட்டுச் செலாவணிப் பெருக்க மசோதாவுக்குக் கொண்டுவரப்பட்டு நிறைவேறியது.

500 லட்சம் டாலருக்கு கஜானு உண்டியல்கள் வெளியிட்டதில் தேவைக்கதிகமாகவே சேர்ந்து விட்டது.

—

## அடுத்த வைசிராய்.

தற்போதிய வைசிராய் லார்டு வில்லிங்டன் ராஜீநாமா செய்து விட்டுப் போகப்போவதாக உலாவும் வதந்தியை யொட்டி அடுத்த வைசிராயின் பெயர் சொல்லப்பட்டு வருகிறது. லண்டனில் பலர் அடுத்த வைசிராயாக லார்டு லின் லித்கௌ அல்லது லார்டு லண்டண்டரி வரலாமென்று யூகிக்கின்றனராம்.

—

## ரங்கூனில் துணிகரக் கொள்ளை

ஒரு இந்தியர் 3000 ரூபாய் இன்ஷூர் கவருக்கு போஸ்டாபீசில் ஸ்டாம்பு ஒட்டிக்கொண்டிருந்த போது, ஒரு பர்மியன் பலாத்காரமாய் அதனை பிடுங்கிக்கொண்டு சைகிலில் ஏறிப் பறந்து விட்டான். அப்போது ஏற்பட்ட குழப்பத்தில் போலீசார் தோன்றி அவர்கள் திருடனைத் தொடர்ந்து சென்று பிடித்துக்கொண்டனர்.

—

## கராச்சி-சிங்கப்பூர் ஆகாயத் தபால்.

ஸிம்லா, ஏப் 27—

கராச்சியிலிருந்து சிங்கப்பூருக்கு ஆகாயத் தபால்களை ஏற்றிச் செல்வதற்காக "இந்தியர் அண்டு டிரான்ஸ் காண்டினெண்டல் ஏர்வேஸ் கம்பெனி" என்ற இந்தியக்கம்பெனியுடன் 5 வருஷ ஒப்பந்தம் ஒன்று தற்பொழுதுதான் செய்யப்பட்டிருப்பதாகக் கராச்சியிலிருந்து ஒரு செய்தி கிடைத்திருக்கின்றது.

—

## ரங்கூன் பெண்விமானி.

மிஸஸ் ஹாரிபானி என்ற பெண் ஆகாய விமானி ரங்கூனிலிருந்து கல்கத்தாவுக்குப் புறப்பட்டிருக்கிறார். பழுதடைந்த அவரது விமானமும் கழற்றப்பட்டு கப்பலில் அனுப்பப்பட்டிருக்கிறது. அங்கு விமானத்தைச் சீர்ப்படுத்திக் கொண்டு அவர்பிறகு பறந்து செல்வார்.

—

## பீஹாருக்கு இந்தியர் மந்திரி.

பீஹார் மாகாண மந்திரியாகக் கான்பகதூர் சையத் முகம்மது ஹுஸேன் நியமிக்கப்பட்டிருக்கிறார். அவர் மே மாதம் எட்டாந்தேதி ராஞ்சிக்குச் சென்று உத்தியோக மேற்றுக்கொள்வார். இவர் பாட்னாவில் கவர்ன்மெண்டு ப்ளீடராக வேலை பார்த்திருக்கிறார்

—

## வணங்கும் ஈச்சமரம்

பாலகூர் ஜில்லாவில் பாஸ்டா ரயில்வே ஸ்டேஷனுக்கு சுமார் 2 மைலில் தூரத்தில் உள்ள ஒரு ஈச்சமரம நடுமத்தியானத்தில் தரையில் மட்டமாய் விழுந்துவிடுவதாகவும் மீண்டும் நடுராத்திரியில் தலைதூக்கி நேராக நிற்பதாகவும் சொல்லப்படுகிறது. இந்த இயற்கையின் விநோதத்தைக் காண பிரதிதினமும் அங்கு நூற்றுக்கணக்கான பேர் கூடுகிறார்கள்.

—

## உத்யோக மாற்றங்கள்

மிஸ்டர் டி. எம். எஸ். மணி ஐ. சி. எஸ், பரிற்சி முடிந்ததும் சிவகாசி டிவிஷன் சப்கலெக்டராக வேலை பார்ப்பார்.

0 0 0

புதுக்கோட்டை போலீஸ் கமிஷனர் மிஸ்டர் ஏ. ஆர். ஜாக்மன் அவர்கட்கு மே 1ந் தேதி முதல் 10 மாதத்திற்கு ரஜா.

# உபசாரப் பெயர்கள்.

(தென்னலி ராமன்)

### ஸ்ரீமான்

என்பது ஒரு உபசார வார்த்தை. தமிழ் நாட்டில் கொஞ்சம் கற்றறிவுடைய எவனிடத்திலும் ஒரு மனிதனைக் குறிப்பிடு என்றால் உடன் ஸ்ரீமான்..........(இன்னார்)என்றுதான் கூறுவான். விசேஷமாகவும் சுதேசமித்திரன் வாசகர்களும் ஆதரப்பார்ப்பன ஆசிரியர் நடாத்தும் பத்திரிகைபடிப்போரும் ஸ்ரீமான் அடையை விடவே மாட்டார்கள். அவர்கள் கொஞ்சமாவது ஒருவன் ஏழையா அல்லது தனவந்தனாவென்பதைப்பார்ப்பதேயில்லை. தினசரி ஒன்றரையணா சம்பாதிப்பவரும் ஆகவே 'சோத்துக்கு லாட்டரி' போடுபவருமாகிய வயிறொட்டிகள் வாழும் இவ் இந்தியாவில் ஸ்ரீமான்களுக்கு இடமுண்டா? இந்தியருக்கு ஸ்ரீமான் பட்டம் போடுவது ஸ்ரீக்கே அர்த்தமில்லாமல் செய்வதாகும். ஸ்ரீமான் என்பதற்கு ஸ்திரீ மனிதன் என்று அர்த்தம் சொன்னால் ஒருவாறு இந்தியருக்குப்பொருந்தும்.

### தகாப் பெயர்.

வடதிருவாங்கூரில் பழைய அரச குடும்பங்கள் சிலஇருக்கின்றன. இக் குடும்பங்கள் அந்தக் காலத்தில் நாடாண்டு, போர் புரிந்து, வீராயிருந்து, செல்வத்தில் திளைத்து வந்தாலும் இது காலை ஸ்பெயின் அல்பான் ஸோவாகவும், ஜர்மன் கெய்சராகவும், கிரீஸ் ஜார்ஜாகவும், ருஷிய ஜார்களாகவுமே இருக்கின்றன. அவர்களில் பெரும் பாலாருக்கு சோற்றுக்கே லாட்டரி. 'யானையெருத்தம் பொலியக் குடை நிழற்கீழ்'வாழ்வோரும் 'வினை புலப்ப வேறுகி வீழ்வர்' என்ற நாலடியார் வாக்குக்கு சாட்சிகூறி நிற்பவர்கள் இவர்களே தான். இந்த ராஜாக்கள்-இல்லை தம்பிரான்கள்—காலையில் எழுந்திருந்து பனையேறவோ, கிழங்குவெட்டவோ, தோட்டத்தைக் கிண்டவோ, வயலை உழவோ செய்யவில்லையானால் "ஒரு நாளுணவை ஒழியென்றாலொழியாய்" என்ற ஔவையார்பாட்டை முறைவைத்து ஓதவேண்டுவதுதான். இந்த ராஜாக்கள் தங்கள் பட்டங்களை ஒரு காலத்தில் (நாடுபோய் விட்டாலும்) விட்டுவிட இசையவில்லையாம். தங்களை "பொன்னு திருமேனி" "தம்பிரான்" "சமுகம்" "சன்னிதானம்" என்று தான் அழைக்கவேண்டுமென்று வற்புறுத்தினார்களாம். ஆகவே பொதுஜனங்கள் இப்பூஜ்ய நாமங்களை உபயோகித்து வருகின்றார்கள். ஆனால் இன்று திருமேனி வயலை உழுகிறார், ராஜா பனைமரத்திலேறுகிறார், தம்பிரான் கிழங்குகளை வெட்டுகிறார், சமுகம் ஏன் நேற்றுவேலியை வெட்டி செப்பனிடவில்லை என்று சொல்ல வேண்டியிருக்கின்றது. அங்ஙனம் சொல்லப்படும் போது அவர்கள் மனம் வேகின்ற வேக்காடு கூறமுடியாது. என்னவழியிலாவது தங்களை விட்டு அப்பட்டப் பெயர்கள் ஒழியாதாவென்றே தவிக்கின்றனர். ஐயோ! அவர்கள் நிலைமையை சிறிதுசிந்திக்க. இந்தக் கதை, இந்திய ஸ்ரீமான்களைக் நினைக்கும் போது எனக்கு ஞாபகத்துக்கு வருகின்றது.

### திருவாளர்.

வடமொழியை யொழிக்க வேண்டுமென்று மீசைமுறுக்கித் தமிழிலிருக்கும் பெருவாரியான பதங்களைக் கழுத்தை நெக்கி வெளியே தள்ளிக் கோட்டைகட்டும் "மறைமலை" போன்ற கவியார் ஸ்ரீமானுக்குப் பதிலாக திருவாளர் என்பதை யுபயோகிப்பதே சிலாக்கியமென்று நினைக்கின்றனர். ஸ்ரீ யென்றால் செல்வம் அதாவது திரு. ஆகவே ஸ்ரீமான் என்பது அவர்கள் கருத்துப்படி திருவாளராகின்றது. இந்தத் திருவாளர் பொடிப்பட்டமும் கண்ணை மூடிக்கொண்டு எவருக்குமுன்னுடியும் வைக்கப்படுகிறது. ஒருவன் திருவை ஆண்டாலும்சரி, 'திருவை'யை ஆண்டாலும் சரி, 'மைட்டாக' திருவாளர் பதத்தைப் பெற்றுவிடுகின்றான். இந்தத் திருவாளர் பதப்பிரயோகிகளுக்கிடையில் சில சோம்பேறிகளுண்டு.

### திரு.

அவர்கட்கு திருவாளர் என்ற ஐந்தெழுத்தையும் எழுத ஏலுவதில்லை. ஆகவே திரு வென்றெழுதி முற்றுப்புள்ளிபோட்டு அதற்குள் வாளர் தூங்கிக் கிடப்பதாக சங்கற்பம் செய்துவிடுகின்றார்கள். இந்த திருச் சோம்பேறிகளையும் விட பெரிய வேறொரு சோம்பேறிக்கூட்டத்தார் இருக்கின்றனர்.

### ஸ்ரீ

அவர்கள் இரண்டெழுத்துக் கூட எழுதுவதில்லை. ஸ்ரீமான் என்ற பதத்தின் முதலெழுத்தாகிய 'ஸ்ரீ' யென்பதை மட்டிலு மெழுதிவிட்டுத் திருப்திபடைந்து விடுகிறார்கள். அவர்களில் ஒரு பகுதியார் திருவாளர் ஸ்ரீமான் ஆகியவைகளைவிட ஸ்ரீ என்றெழுதுவது சிறப்புடைத்து என்று சொல்லாமலுமில்லை. உண்மையில் அது சிறப்புடையதோ என்னமோ ஒன்றரையணாப் பிரபுக்களுக்கும் ஸ்ரீக்கும் பொருத்தமில்லையென்பது திண்ணம். ஒருக்கால் அப்பிரபுக்களின் முதலாவது ஆசையான ஸ்ரீ (செல்வம்) என்பதைத்தான் அவ்வெழுத்து முதல் நின்று காட்டுகின்றது என்று கூறுவதானால் ஒவ்வொரு இந்தியனும் எவ்வளவு வேண்டுமானாலும் அத்திருவுக்காகக் கொட்டாவிபோடட்டும் அல்லது வாயையே பிளந்து கொண்டிருக்கட்டும். இன்றேல் முன்னும் பின்னும் மேலும்கீழும் ஸ்ரீகளைக்கட்டித் தொங்கப் போடட்டும்.

### மிஸ்டர்.

இன்னொரு வகுப்பார்—அவர்கள் பெரும்பாலாக மொழிபெயர்ப்பாளர்கள். அவர்கள்—ஆங்கிலத்தி லுள்ள மிஸ்டர் (Mister) என்ற பதத்தைத் தமிழில் திருவாளர் என்று எழுதுகின்றனர். மிஸ்டர் என்பதற்குத் தமிழில் ஸ்ரீமான் (அல்லது திருவாளர்) என்பதா பொருள் என்று கேட்டால் (பெரும்பாலாருக்கு தகுந்தபடி விடையிறுக்கத் தெரியாமல் போனாலும்) சிலர் 'அது தமிழ்வழக்குப்பற்றிப் போடப்பட்டது" என்று பதில் கூறுவர். தமிழ்வழக்கு எப்படி இருந்தாலும் மிஸ்டர் என்பதற்குத் திருவாளர் என்பது கருத்தல்ல. ஸ்பென்சர் என்ற ஆங்கில ஆசிரியர் மிஸ்டர் என்றபதத்தை நலலகுணமுடைய, இரக்கசித்தமுடைய என்ற பொருளில் உபயோகித்திருக்கிறார். இதன்படிப் பார்த்தால் இப்போது நாம் மிஸ்டரைச் சேர்த்துவருகின்ற பணக்காரார்கட்கும் உத்தியோகஸ்தர்கட்கும் அன்றிபலபடியானபெரும்பதவிகளிலிருப்பவர்கட்கும் மிஸ்டர்பதப்பிரயோகம் தகுமா? நல்ல குணமுடையவரும் இரக்க சித்தமுடையவரும் பெரும்பாலாக ஏழைகளுக் கிடையிலும் தொழிலாளிகட் கிடையிலும் படிப்பற்றவர்கட்கிடையிலுமே காணக்கூடுமன்றோ? ஆனால் அந்தச் சாரார்கட்குத்தான் இப்போதிய உலகம் மிஸ்டர் பட்டம் போடுவதில்லை: நிற்க.

மிஸ்டர் என்ற பதத்தை இன்னும் கொஞ்சம் துருவிப் பார்த்து அதன் தாது என்ன என்று ஆராய்ந்து பார்த்தால் மெஸ்டியர் (Mestier) என்ற பழைய பிரஞ்சுப் பதத்திலிருந்து பிறந்தது என்று காணலாம். மெஸ்டியர் என்றால் (Trade) தொழில் என்பது பொருள். ஆகவே மிஸ்டர் என்பது தொழில் செய்பவனையே காண்பிக்கிறது. இந்த தாதுப் பொருட்படி நோக்கினாலும் நாம் இப்போது தொழிலாளிகளல்லாத யார் யாருக்கோ மிஸ்டர் என்று போடுவது சரியல்லவென்று காணலாம். அது எப்படியாவது ஒழியட்டும்.

### உயர்திரு

சிலர் திரு, திருவாளர், ஸ்ரீமாங் என்ற வால்களை-இல்லை உச்சிக் குடுமிகளை-விட்டு விட்டு ஒருவரை அதிகமாகப் புகழ்வதாயெண்ணி உயர் திருவாளர் என்று சொல்கின்றனர். அந்தப்பதத்தைக் கேட்டவுடனே அந்தப் பதத்தை ஏற்றுநிற்பவர் ஏதோகொஞ்சம் உயரமானவரோ என்ற சந்தேகம் வருகின்றது. இலக்கியப் புலிகள் அதற்குப் பலப்பல வியாக்கியானங்களைக் கூறிவிடலாம். போகட்டும்.

### கனம்.

வேறு சிலர் இதுவரையிலும் சொன்ன திருவினங்களையெல்லாம் மூட்டைகட்டிப் போட்டுவிட்டு, அதைவிடப் பாரமான ஒரு பட்டத்தை கையாடுகின்றார்கள். அதாவது என்ன? கனம் என்ற பட்டம். இந்தப்பட்டத்தையும், ஒருவனின் எடை, கைகால் வயிறு மார்பு முதலியவற்றின் ஏற்றக் குறைவு ஆகியவற்றைக் கவனியாது பலர் உபயோகித்து விடுகின்றனர். 180 ராத்தல் எடையுள்ள பெரிய ஸ்ரீனிவாச சாஸ்திரியையும் கனம் என்று போட்டுவிடுகின்றனர். ஒன்ணு ஷவுகத்அலியை கனம் ஷவுகத் அலியென்று கூறிவிட்டு 90 ராத்தல் எடையுள்ள காந்திஜியையும் கனம் காந்தி என்றால் தகுமா? எனதபிப்பிராயத்தில் சுண்டலி போல உருவமுடைய ஒருவனைப்பார்த்து கனம் எலி அவர்கள் என்று சொல்வது தகுதியல்லவென்றுபடுகிறது. ஐயோ! இந்தப் பட்டம் ராமாயண பாரத காலங்களில் இருந்ததா? கம்பர் போன்றவர்களெல்லாம் பெரும் பெரும் உருவுடைத்த ராக்ஷசர்களை வருணிக்கப் போதுமான பதங்களில்லாது தவித்தார்களாம். கனம் ராவணன் கனம் கும்பகர்ணன் கனம் கவந்தன் என்று சொல்லியிருந்தால் எவ்வளவு பொருத்தமாக விருக்கும்?

### மகாகனம்

இங்ஙனம் கனத்தைப்பற்றிப் பேசும்போது மகாகனம் என்பது என் மூளையைவிட்டு நழுவ ஆரம்பிக்கிறது. இந்தப்பட்டத்தை சாதாரணமாக எல்லோரும் உபயோகிப்பதில்லை. தென்னிந்தியாவில் ஒருவர் மட்டிலுந்தான் மகாகனமாக விளங்குகின்றார். ஆதியில் அப்பெயரைக் நான் கேட்டவுடனே ஏதோ ஒரு ரோலர் எஞ்சின் போன்ற உருவத்தை நினைத்தேன்.

### பெரியார்

அப்படிப்பட்ட எனக்கு பெரியார் என்ற நாமத்தைக் கேட்டால் எப்படியிருக்கும்! நான் பெரியார் நாமம் ஏதோ மலை போன்ற உருவத்தைக் குறிப்பிடுவதாகநினைத்தேன். அதோடு பெரியது என்பதற்கு அளவில்லையல்லவா?—ஆகவே—எவ்வளவு பெரிய உருவை தியானித்தாலும் அதுவும் பொருந்துமோ என்றும் சந்தேகித்தேன். இத்தகைய என் சந்தேகம் ஒரு பாலிருக்கட்டும். தமிழ் நாட்டில் பெரியார் என்ற பதத்திற்கு என்ன மதிப்பு வைக்கப்படுகிறதென்றுபார்ப்போம். தென்னிந்திய இந்துக்கள் சித்தர்களையும், முனிவர்களையும் மத சம்பந்தமான பெருமை படைத்தோரையுமேபெரியவர்என்கின்றனர். இன்றும் நீங்கள் கிராமாந்தரங்களில் சென்று பொன்னம்பலசாமி யெப்படி என்று ஜனங்கள் மதிக்கின்ற ஒரு சந்நியாசியைப் பற்றி விசாரித்தால் "அவர் பெரியவரல்லவா?" என்ற பதிலைக் கேட்பீர்கள். அதாவது அமானுஷிகமான சக்தி படைத்தவர்களையே தமிழ் நாடு பெரியவர் என்கின்றது.

### மகாத்மா

இந்தப் பெரியார் பதம் ஒரு கால் மகாத்மா வென்ற வடமொழிப்பதத்திற்குப் போட்டியாகவிருக்குமோ என்னமோ! மகாத்மா வென்ற பதம் பெரிய ஆத்மா அதாவது பெரிய மனிதர் (பெரியார்) என்பதைத் தான் காண்பிக்கின்றது. இந்தப் பதத்தை, (தமிழ் நாட்டார் பெரிய சந்நியாசிகட்கு பெரியார் என்பதை உபயோகிப்பது போல) வட நாட்டார் பெரிய சந்நியாசிகளைக் குறிப்பிடுவதற்காக உபயோகிக்கின்றார்கள்.

### சகோதரி.

இது ஒரு சில பெண்கள் சூடிக் கொள்ளும் பட்டமாம். இது சிலவருடங்கட்கு முன்பு பரவிவருவது போல் தோற்றியது; ஆனால் வழியில் இறந்து போய்விட்டது. இதற்கு ஆண்பாலாகிய சகோதரன் என்றபதம் பழக்கத்திலில்லை.

### தோழர்

அதற்குப் பதிலாக இப்போது தோழர் என்பது கிளம்பியுள்ளது. இப்பதம் பெரும்பாலாக எல்லா கக்ஷியாராலும் மேற்கொள்ளப்படுகின்றது. இப்பதத்தில் சந்நியாசித்தனமோ, ரோலர் எஞ்சின் பொருளோ, மூங்கில் உயரமோ, மகாமேரு மகாகனமோ, இரண்டறு பிரபுத்தன்மையோ காணப்படவில்லை. நண்பன், சமத்துவமானவன் என்ற அர்த்தமே தொனிக்கின்றது. இதனால் எவருக்கும் தீங்கு வருவதற்கில்லை.

---

ரிஜிஸ்டர்



டிரேட் மார்க்கு

## நீராழிவுக்குக் கைகண்ட மருந்து

## பழனி R. M. K. அப்ரேக் செந்தூரம்.

இதோ! ஒரு மருந்துக்கும் வசப்படாத வியாதி இந்த மருந்தில் தீருவது ஆச்சரியமாயிருக்கிறது. இப்படி சிரேஷ்டமான மருந்து இதுவரை வெளிவரவில்லை. எந்த மருந்திலும் தீராத வியாதிகள் இதில் அவசியம் தீரும் நீராழிவினால் ஜாஸ்திபோகும் நீரை நிறுத்தும், தாகத்தைக் குறைக்கும். நாட்பட்ட அஸ்தி வெட்டை நீரோடு இந்திரியம் உடைந்து விழுதல், ஈ, எறும்பு மொய்த்தல், நாவரட்சி, மலபந்தம், உடம்பெரிவு, வெள்ளை, கடுப்பு, எரிச்சல் முதலிய சகலவித கர்மவியாதிகளையும் கண்டிப்பாய் நிவர்த்தியாகும். நீரிலுள்ள சர்க்கரையைக் குறைத்து சரீர வெளுப்பும்மாற்றி தேஜஸ் பலம் கொடுக்கும். நீராழிவால் வரும் பிளவை, ரணங்களை ஆற்றும். பசி தீபனங்களை உண்டாக்கும். ஜீவாதார நரம்புகளை முறுக்கேற்றி தாதுபுஷ்டியைக் கொடுக்கும். 40 நாள் மருந்து 40 ரூபா அனுபானம் 10 ரூபா ஆக ரூபா 50. 20 நாளைக்கு ரூபா 25. ஏழைகளுக்குப் பாதிவிலை.

## இருமல் இளைப்பு தீர்ந்துவிட்டது

# தாளக பஸ்பம்.

## இருமலுக்கு கைகண்ட மருந்து.

### எவ்வளவு நாட்பட்ட காசம், க்ஷயம், ஈளை, இருமல் கஷ்டசுவாசம் கோழை கபக்கட்டு பீனிசம், இருந்தாலும் சரி இதில் அவசியம் தீரும்

பித்தநீர் சிரசுகேறிகபாலம் கொதித்தே 8 வித பீனிசரோகம் வருகிறது. பீனிசரோகம் முத்தியே காசம் 8-ம், இருமல் 26-ம், இளைப்பும் வருகிறது.

நீங்கள் இருமலினால் என்ன கஷ்டப்பட்டாலும் சரி! எத்தனையோ மருந்துகள் சாப்பிட்டு இருமல் தீராதிருந்தாலும் சரி! உங்கள் இருமலை 6 நாளில் கண்டிப்பாய் நிறுத்திவிடும் அது எத்தனை வருஷத்திய ரோகமானாலும் சரி பறந்துவிடும். சீதள, மழை, பனி காலங்களில் வரும் ஈளை, இருமல், இரைப்பு, இளைப்பு, கக்கல், மந்தாரகாசம், கஷ்டசுவாசம், கோழை, கபக்கட்டு அதனால் மார்புவலி, விலாவலி, முள்ளந்தண்டு வலி சிராய்ப்பீனிசம், மூக்கில் ஜலம் ஒழுகுதல், தும்மல், வயிறுஉப்புசம், தலைவலி, காது குடைதல், ஜுரம், மூச்சு திணறுதல், நெஞ்சில் தொண்டையில் கர்முர் என்ற சப்தம், பூனைபோல் கத்துதல், கூவுதல், நுரையீரல், தாபனம் முதலியவை இதில் அவசியம் தீரும். அனுபவத்தில் கைகண்ட மகா அருமையான மருந்து, 20 நாள் தாளகபற்பம், அனுபானம் தாளிசபத்திரி சூரணத்துடன் விலை ரூபா 25, ஏழைகளுக்கு ரூபா 12—8—0.

வைத்திய ஆசிரியர்,

## ஆர். எம். கே. வேலுசாமி பிள்ளை,

சித்திய வைத்தியசாலை

பழனி. (PALNI)

---

## திருவாங்கூர் நாஷனல் பாங்கு லிமிடெட்,

(திருவாங்கூரில் 1912ல் இணைக்கப்பட்டது)

**தலைமை ஆபீஸ்:- திருவல்லா.**

கிளைகள்:— சென்னை, மதுரை, திருச்சினுப்பள்ளி, உதகமண்டலம், கள்ளிக்கோட்டை, உடுமலைப்பேட்டை, திருவனந்தபுரம், கொல்லம், ஆலப்புழை, கோட்டையம், எர்ணுகுளம், கொச்சி, திருப்புணித்துறை, தேவிகுளம், மூனர்.

செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 422050-1-4. ரிசர்வ் பண்டு ரூ. 200000-0-0

கவர்மெண்டு பாண்டுகளிலும் மற்ற பாங்குகளில் பிக்ஸட் டிபாஸிட்டாகவும் நிக்ஷேபிக்கப்பட்டிருக்கும் தொகை ரூ. 430486-2-2 1933 டிசம்பர்மீ 31ந் தேதியில் மொத்தம் வேலை செய்யும் தொகை ரூ. 5818199—2—1.

### திருச்சிக்கிளையின் மாத ஏலச்சீட்டு பண்டு (நிர் 3.)

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| A | வகுப்பு | டிக்கட்டு | 1000 | ரூ | ஒரு | தவணைக்கு | 40 ரூ | விகிதம் |
| B | ,, | ,, | 500 | ,, | ,, | ,, | 20 ,, | ,, |
| C | ,, | ,, | 250 | ,, | ,, | ,, | 10 ,, | ,, |
| D | ,, | ,, | 125 | ,, | ,, | ,, | 5 ,, | ,, |

சீட்டின் எல்லா சந்தாதாரர்களும், சீட்டு கிடைத்தவர்களும் இல்லாதவர்களும், சட்டப்படி டிவிடண்டைப் பெறுவார்கள். சீட்டுபண்டு 25 மாதங்களில் முடியும். முதலாவது ஏலம் 1933 மே மாதத்தில் நடைபெறும்.

சந்தாதார்கள் இப்பொழுது சேர்க்கப்படுகிறார்கள். இந்த ஜாபிதா மே மாதத்திலேயே கிடைத்துவிட்டால் அதற்கு முன்னுடியே பூர்த்தியாகி விடலாம்.

சீட்டு பண்டின் விபரமான விதிகளும் விண்ணப்ப பாரங்களும் திருச்சிக்கிளையிலிருந்தோ அல்லது பாங்கின் மற்ற ஆபீசுகளிலிருந்தோ பெற்றுக்கொள்ளலாம்.

தங்கத்தின் மேல் அடியில் வரும் விகிதத்தில் கடன் கொடுக்கப்படும்.

1000க்கு மேல் 8% 500க்கு மேல் 8½% 20க்கு மேல் 9%

சாமான்களின் மீதோ விலைபொருள்களின் ஜாமீனின் பேரில் நியாயமான வட்டிக்குக் கடன் கொடுக்கப்படும்.

திருச்சினுப்பள்ளி, 23—3—33.

ஜெ. கெ. நைனன், B. Sc.,
ஏஜெண்டு, திருச்சி பாங்கு.

Edited, Printed and Published By S. MURUGAPPA for Dhana Vysian Company. Ltd., at the Kumaran Power Press, Karaikudi.

